"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1892௵ டிசம்பர்௴. இலக்கம். 8.

## சுதந்தரங்களின் விளக்கம்.

### I.

1. ஒவ்வொரு மனிதனும் இம்மையில் தான் செய்யவேண்டியகடமையைச்செய்துசுகத்தை யடைவதற்கும் கடவுளின் கிருபையினால் தனக்குக் கிடைத்திருக்கும் நற்குணங்களைப் பரிபக்குவ நிலைக்குக் கொண்டுவருவதற்கும் தன் புத்தி, உடல், உறுப்புகள் முதலிய வற்றைத் தடையின்றிப் பல கிரியைகளிற் செலுத்தும் சக்திகள் அத்தியாவசியகமா யிருக்கின்றன. நாகரீக மடைந்த எவ்வினத்தாரிலும் மேற்கூறிய இலக்கணத்தை யுடைய சக்திகள் அவருளொவ் வொருவருக்கும் உண்டென்று துரைத்தன முறையால் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றது. ஜனசமூகத்தில் பொறுப்பை வகிக்கும் அதிகாரிகள் குடிகளொவ்வொருவரின் செயல்களனைத்தையும் கவனித்து மேனோக்குவது முடியாது; ஆகையால், பல விஷயங்களிற் சனங்கள் தடையின்றித் தம்மனஞ் சென்றபடியே நடந்துவருவார்கள். மேலும் நற்குணங்களின் பயிற்சிக்கும் அப்படி நடந்து வருதல் அவசியமா யிருக்கிறது. தடையின்றி காரியங்களைச் செய்வதற்குரிய சக்திக்கும் யோக்கியதைக்கும் சுதந்தரம் என்று பெயர். ஒவ்வொருவனும் அதை வேண்டுங்கால் செலுத்திக்கொண்டும் செலுத்தாதொழிந்து மிருக்கலாம். அச்சுதந்தரத்தைப் பிறர் தடை செய்யவுங் கூடா தென்னும் நிர்ப்பந்தமுண்டு. ஒவ்வொருவருக்கு முரிய ஒவ்வொரு சுதந்தரத்திற் கேற்றபடி பிறருக்கு நிர்ப்பந்த மேற்படுகின்றது. இராமனுக்கு ஒரு சொத்துக்குச் சுதந்தரமிருந்தால், அச்சொத்தைத் தனக்குபயோக மாக்கிக் கொள்வதைத் தடுக்கா திருக்கக் கிருஷ்ணன் முதலியவர்கள் நிர்ப்பந்தப்பட் டிருக்கிறார்கள். அப்படியே இராமனென்பவனுக்கு கிருஷ்ணனிடத்திலிருந்து ஒரு ஊழியத்தைப் பெறச் சுதந்தரமிருந்தால் அவ்வூழியத்தைச் செய்யக் கிருஷ்ணனும் நிர்ப்பந்தப் பட்டிருக்கிறான்.

2. மனிதருக்குச் சுதந்திரங்களுண்டென்று உலகம் முழுவதும் உள்ள நாகரீகமடைந்த சங்கத்தார்களால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஒருதகப்பன் தன் சிறுவர்களி லொருவனுக்கு ஒரு பழத்தைக்கொடுத்தால் அப்பழத்திற்குத் தனக்கு மாத்திரஞ் சுதந்தர முள்ளதாக அச்சிறுவன் பாவிப்பான். அதை யுண்ணுவதற்காவது, தன் சகோதரரி லொருவனுக்குக் கொடுப்பதற்காவது, தனக்கு வேண்டாமென்று எறிந்துவிடுவதற்காவது தனக்குப் பாத்தியதை யுண்டென்றும், தன்னிலும் வலிமையில் மிகுந்த மற்றொரு சிறுவன் அதைப் பிடுங்கிக்கொண்டாலும் களவு செய்தாலும் ஒரு தீங்கு நேரிட்டதென்று நினைத்து அதை மறுபடி தன்வசம் அடைய முயற்சி செய்யலா மென்றும் அவன் அறிந்திருக்கிறான். இந்த உதாரணத்திலிருந்து ஒரு குடும்பத்தி லடங்கியவர்களுக் குள்ளும் சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களு முண்டென்று ஏற்படுகின்றது. துரைத்தனத்திற்குரிய சட்ட

த்தினாலும் மேற்கூறியபடி சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களு மேற்படுகின்றன. பொய்ச்சாட்சி சொல்லாதிருக்க எவரும் சட்டத்தினால் நிர்ப்பந்தப்பட்டிருக்கிறார்கள்; ஏனெனில், இவ்விதமான நிர்ப்பந்த மில்லாவிட்டால் பிறர் தங்களுடைய சொத்து அல்லது உயிருக்குரிய சுதந்தரத்தை யிழந்து விடுவார்கள். நாகரீகங் குன்றியிருக்கும் அநேக சங்கத்தாருங்கூட சுதந்தரங்களையும் நிர்ப்பந்தங்களையும் பாராட்டி வருவதாக நாமறிகிறோம். காட்டில் மிருகங்களுக்குத் துல்லியமாய்* வாழ்ந்துவருங் கூட்டங்களிலும் அவைகளின் ஞானம் சிறிதேனு மில்லாதிருக்குமென்று நினைக்க விடமில்லை. ஆகையால் எல்லாவிடத்திலும் சிறிதேனும் நாகரீகப் பயிற்சியடைந்திருக்கும் எல்லா சங்கத்தாரிலும் மேற்கூறியபடி சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் ஒவ்வொரு மனிதனுக்கு முரியவைகளென்னும் அறிவு பொதுவா யிருக்கின்றது.

3. மேற்கூறிய இலக்கணங்களை யுடைய சுதந்தரங்கள் மனிதருக்கு இருக்கவேண்டு மென்பதற்கு மனிதரினியல்பும், மனிதருக்கு இம்மையிற் சீவனங்கழித்தே தீரவேண்டியதா யிருக்கிற ஆவசியகங்களும், இவ்வியல்போடும் ஆவசியகங்களோடும் நம்மைப் படைத்திருக்கும் ஆண்டவரின் கருத்துமாகிய இவைகளே தகுந்த காரணங்க ளாகின்றன. நம்முடைய உயிரை யிரட்சித்துக் கொள்ளாதும், நமது குடும்பத்தார், நம்மினத்தா ராகிய இவருடன் சகவாசஞ் செய்யாதும் கடவுளின் கருத்துக் கிசைந்து நடக்காதும் நாம் நமக்குரிய மானிட விலக்கணத்தைக் காப்பாற்ற முடியாது. ஆகையால் இக்காரியங்களை நிறைவேற்றிக் கொள்ள நமக்குச் சுதந்தரங்க ளுண்டென்பதற்குத் தகுந்த காரணமிருக்க வேண்டிய தென்பதைக் குறித்துச் சிறிதும் ஐயமில்லை.

4. மேலும் மனிதரின் ஆசைக்களவில்லை யென்பது உறுதி. மனிதர் தத்தம் ஆசைகளையே மேற்கொண்டு நடந்துவிட்டால் சங்கத்திற்சமாதானங்குன்றி நாசம் விளைந்து விடும். ஆகையாற் சங்கத்திலுள்ள ஒவ்வொருவரும் தாங்கள் செய்யாதிருக்க வேண்டிய நிர்ப்பந்தங்க ளுண்டென்று எப்பொழுதும் உணர்ந்திருக்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் நிர்ப்பந்தங்க ளேற்படுங்கால் மற்றவருக்குச் சுதந்தரங்களும் அவைக்குத் தக்கபடி நிலை பெறுகின்றன. சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் இப்படி யியற்கையாகவே ஏற்படாவிட்டால் மனிதரின் சங்கங்களில் தீமையே விளையும். சுதந்தரங்களாலும் நிர்ப்பந்தங்களாலும் மனிதருக்கு மனிதர் கட்டுப்படுவதால் அவருக்குச் சங்கத்திற்சகவாசமும், கஷ்ட நிவர்த்தியுஞ் சுகமுங்கிடைக்கின்றன.

5. இவ்விதமான சுதந்தரங்களுக்கும் நிர்ப்பந்தங்களுக்கும் துரைத்தனத்தாரின் சட்டங்களும், நியாயாதிபர்களின் தீர்ப்புகளும், தொன்றுதொட்டுவரும் வழக்கங்களுமாகிய மூன்று காரணங்களுண் டென்பது சிலருடைய கொள்கையா யிருக்கின்றது. இக் காரணங்களையே இராஜநியமம், தர்மக்கிய சமயம், சம்பிரதாய மென்று வடமொழியிற் கூறுவார்கள். இது சரிதான். ஆகிலும் இவைகளாலேற்படும் சுதந்தரங்களையும் நிர்ப்பந்தங்களையும் மாத்திரம் ஒருவன் மேற்கொண்டு வேறொன்றாலுங் கட்டுப்படாவிட்டால், அவனது நடபடிக்கை மனிதருக்குத் திருப்தியையுஞ் சுகத்தையுங் கொடுக்கிறதில்லை. சன்மார்க்க வியல்பினால் வேறு சில சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் உற்பத்தியாகின்றன. ஒருவன் குடிக்கச் சலமில்லாது தாகத்தினால் வருந்தி நம்முடைய வீட்டிற் பிரவேசிக்கிறான்; அவனுக்குக் குடிக்க நீர் கொடுக்கச் சட்டத்தினால் நிர்ப்பந்த மேற்படவில்லை; அவனுக்குச் சுதந்தரமுமில்லை. ஆகிலும் அக்கடமை நம்மால் துறக்கற்பாலதோ?* ஆகையால் மேற்கூறிய மூன்று காரணங்களே மனிதர்க்குரிய சுதந்தரங்களுக்கும் நிர்ப்பந்தங்களுக்கும் மூல காரணங்க ளாகாவென்று விளங்குகின்றது.

நம்முடைய சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் பெரும்பான்மையாக இம்மூன்றுக்காரணங்களைக்கொண்டே ஏற்பட்டுவருதலால் இவைகள் மனிதரின் சுதந்தரநிர்ப்பந்தங்களுக்கு மூல காரணங்களென்று தோன்றுவது சகஜந்தான். ஆகிலும் இவைகளுக்குங் கடவுளால் நியமிக்கப்பட்டிருக்கும் மானிடவியல்பே மூலகார

* சரிசமானமாய்.

* விட்டுவிடத் தக்கதோ.

ணமாயிருக்கிறதென்பதும் அவ்வியல்பை நிராகரிப்பது கூடாதென்பதும் நமக்கு நன்றாய் விளங்குகின்றன. தமக்கு இயல்பாகிய குணங்களை மனிதர் பக்குவம்பெறச் செய்யவேண்டுமென்றும் அப்பக்குவநிலையை அடைவதினால் விளையும் ஆனந்தத்தையுஞ் சுகத்தையும் பெற்றுக் கடவுளின்மேன்மையைப் பாராட்டவேண்டுமென்பதும் மனிதரின்சுபாவத்திற்கே யுரித்தாயிருக்கின்றன. இச்சுபாவத்தை யனுசரித்தே துரைத்தனத்தாரின் சட்டங்களும், நியாயாதிபரின் தீர்ப்புகளும், தொன்றுதொட்டுவரும் வழக்கங்களும் ஏற்பட்டுவந்திருக்கின்றன.

சட்டத்தினாலும் நியாயாதிபரின் தீர்மானங்களினாலு மேற்படுஞ் சுதந்தரங்களைப்பற்றி சந்தேகமாவது அபிப்பிராய பேதமாவதில்லை. துரைத்தனத்தை நடத்தும் அதிகாரிகளால் அவைகள் நியமிக்கப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. மனிதரின் சன்மார்க்க வியல்பினின்று தோன்றும் சுதந்தரங்களிற்சில இவ்வாறு விளங்குகிறதில்லை. இதற்கு உதாரணமாக, இரங்குஞ் சுபாவ முள்ள ஒவ்வொருவருக்கும் ஏழைக்குதவி செய்யவேண்டுமென்பது தங்கள் கடமைகளிலொன்றாய் விளங்கினாலும், தன்னுடைய நிலைமைஃய அனுசரித்துத்தான் உதவி செய்யவாவது உதவி செய்யாதொழியவாவது நிச்சயிக்கவேண்டியிருக்கும். மேலும் ஏழைகளுக்கு உதவிசெய்வது அவ்வேழைகளுக்கே தீதென்றும் சிலர் நினைக்கலாம். ஆகையால் இவ்விஷயத்தில் நாம் உசிதம்போல் நடந்துகொள்ளலாம்.

6. சுதந்தரத்திற்குரியவன் குறித்த வொரு தருணத்தில் அதைச் செலுத்தவும் செலுத்தாதிருக்கவும் தன்மனம்போல் நிச்சயித்துக்கொள்ளலாம்: தன்சுதந்தரங்களை நிறைவேற்றிக்கொள்ளாமல் ஒருவனைத் தடுப்பதற்கும் அவைகளைத் துறக்கும்படி கட்டாயப்படுத்துவதற்கும் மற்றொருவருக்கு மதிகாரமில்லை. தானே தடையின்றி அவற்றை நிறைவேற்றிக்கொள்ளாதொழியலாம். பிறருடைய கட்டாயத்தால் தன் சுதந்தரங்களை ஒருவனிழந்தால் துரைத்தனத்தார் அவனுக்குத் தக்கநிவர்த்தியைக் கொடுக்கப்பாத்தியப்பட்டிருக்கிறார்கள். மேலும் தன் சுதந்தரங்களை ஒருவன் ஒருதருணத்தில் விட்டுவிடுவதால் அவற்றை அவன் எப்பொழுது மிழந்துவிட்டதாக நாமெண்ணக்கூடாது. அவற்றை நிரந்தரமாய்த் துறக்கவும்* சிலவிஷயங்களில் அவனுக்குப் பாத்தியதையில்லை. தன்னை மற்றொருவனுக்கு அடிமையாக விற்றேனும் தற்கொலைபுரிந்தேனும் தனக்குள்ள சுதந்தரங்களையும் கடமைகளையும் செலுத்தா தொழியக்கூடாது.

7. ஒருவன் தனக்குச் சட்டத்தினாலேற்பட்டிருக்கும் சுதந்தரங்களைச் செலுத்திக்கொள்ளுவதைப்பார்க்கிலும் பிறர் சுதந்தரங்களைத் தடுக்காதிருத்தல் பிரதானம். உதாரணமாக, தன் சொத்தைப் பெருக்கிக்கொள்ளுவதைப் பார்க்கிலும் பிறர் சம்பாதிப்பதைத் தடுக்காதிருத்தல் பிரதானம். மனிதரின் சன்மார்க்கவியல்பினின்றும் உற்பவிக்குஞ் சுதந்தரங்களிலோ, தனக்குரிய சுதந்தரங்களை நிறைவேற்றிக்கொள்ளுவது பிரதானம்; பிறருடைய சுதந்தரங்களைத் தடுக்காதிருத்தல் மாத்திரம் அவ்வளவு மகிமையைத் தராது. உதாரணம்:—தருமம்பெறத் தகுதியுடைய ஏழைகளுக்கு தான் தருமஞ் செய்வதைப்போல் பிறர் தருமஞ்செய்வதைத் தடுக்காதிருத்தல் அவ்வளவு முக்கியமல்ல. பிறர் கல்வி சம்பாதித்துக்கொள்ளுவதை தடுக்காதிருத்தலைப்பார்க்கிலும் நமக்குக் கல்வி சம்பாதித்துக்கொள்ளுவது முக்கியம். சமயத்துக்குத்தக்கபடி நாம் நிர்ப்பந்தங்களுக்கு அடங்கியிருத்தலும், பிறர் தங்களுடைய நிர்ப்பந்தங்களுக் கடங்கியிருத்தலை தடுக்காதிருத்தலுமாகிய இரண்டும் ஒன்று மற்றொன்றைவிடப் பிரதானமாய் விளங்கலாம்.

8. வெளிப்படையாய்விளங்குஞ் செய்கைகளுக்கு மாத்திரமே ஒருவன்சட்டத்தினாலாவது நியாயாதிபரின் தீர்மானங்களாலாவது ஏற்படும் நிபந்தனைகளுக்கு உட்படக்கூடும். ஒருவனுடைய எண்ணங்கள் எவ்வளவு கெடுதலாயிருந்தாலும் அதனால் அவனுக்குத்தண்டனையில்லை. இது சங்கத்தினொழுங்குக்கும் உறுதிக்கும் பிரதான ஆதாரம். ஆனால் வெளிப்படையாய்

* துறத்தல் = விட்டுவிடுதல் = அனுபவியாதிருத்தல்.

விளங்கும் செய்கைகளைமாத்திரம் வழுவற நடத்தி மனதைச் சுத்தப்படுத்தாது விடுவது மனிதருக்குத் தங்கள் வாழ்நாள்முழுவதும் பிறரோடு சகவாசத்திற் கலக்கும்பொழுது தங்களை நடத்திக்கொள்ளுவதற்குத் தகுந்த விதியல்ல; சன்மார்க்கத்தினின்று தவருது நடந்து தருமத்தை யாசரித்து கடைத்தேறவும் சங்கத்திற் சுகமாகவாழவும் நமதுள்ளத்தைச் சுத்தப்படுத்தி உள்ளும்புறமு மொத்திருக்குமாறு செய்துகொள்ளவேண்டியது. அப்பொழுது நம் மனச்சாட்சிக்குத் திருப்தியுமுண்டாகும்; நம்முடைய சங்கத்தாருக்கு நாம் அவருடன் வாழ்தலால் ஓர் பிரயோசனங்கிடைத்து அவருடைய புகழ்ச்சிக்கும் நன்றிக்கும் பாத்திரமாவோம்.

9. சட்டத்தினுலேற்படுஞ் சுதந்தரங்களினிலக்கணங்களையும் வரையறைகளையும் ஐயமின்றியும் தெளிவாயுங் குறித்துக் காட்டலாம். பொறுப்பை வகித்தற்குரிய வயது செல்லாதவர்களும் பைத்தியம்பிடித்தவர்களும் தவிர, குடிகளிலொவ்வொருவருக்கும் தங்கள் சொத்தைப்பற்றியாவது தங்களாற் செய்யத் திறமையுள்ள வேலையைக்குறித்தாவது தம் விருப்பப்படி பிறருடன் பொதுவாய் உடன்படிக்கை செய்துகொள்ளச் சுதந்தரமுண்டென்பதற்குச் சந்தேகமில்லை; சிலவிடங்களில் உடன்படிக்கை செய்துகொண்டவரின்உண்மையானகருத்தை அவருபயோகித்திருக்கும் வாசகத்தைக்கொண்டு குறிப்பாயறிவதிற் சந்தேக முண்டாகலாம்; இச்சந்தேகம் உடன்படிக்கையி னிலக்கணத்தைப்பற்றி யுண்டாவதேதவிர, உடன்படிக்கை செய்துகொள்ளுவதற்குரிய சுதந்தரத்தைப்பற்றியல்ல. அப்படியே ஒரு குடும்பத்திலடங்கியவருள்ளும் ஒவ்வொருவருக்குமுள்ள சுதந்தரங்கள் குறிப்பாய் விளங்குகின்றன.

மனிதரின் சன்மார்க்கவியல்பினுல் சாதாரணமாயேற்படுஞ் சுதந்தரங்களைப்பற்றி இம்மாதிரியாய்த் தெளிவானஅறிவும் விதிகளுங் கிடைக்கிறதில்லை. சட்டங்களில் பிரிவுபிரிவாய் விதிகளேற்படுவதுபோல் இவ்வகுப்பிற்குரிய சுதந்தரங்களைப்பற்றி விதிகள் ஏற்படா. ஒருவனுடைய மாதாந்தரச் செலவைப்பற்றியாவது, அயலாருடன் வைத்துக்கொள்ள வேண்டிய சிநேகத்தின் முறைமையைப்பற்றியாவது குறிப்பான விதிகளை ஏற்படுத்துவது சாத்தியமல்ல. ஒவ்வொருவனுடைய சுபாவமும் பயிற்சியுமே தனக்குச் சமயோசிதமாக நடந்துகொள்ளுவதற்கு ஆதாரங்களாகின்றன.

10. சுதந்தரங்கள் பெரும்பாலும் குறிப்பாய் எடுத்துக்காட்டக் கூடியவையாதலால், அவைகளைச் சட்டங்களில் விதிப்பது நலம். அவ்விதிகளாலேற்படும் நிர்ப்பந்தங்களை மறுப்பதினுல் யாருக்குத் தீங்கு நேரிடுகிறதோ அவர் அவைகளைமறுப்பவருக்கு துரைத்தனத்தாரின் வலிமையைக்கொண்டும், சிலவிடங்களில் சொந்தவலிமையைக்கொண்டும் பலாத்காரத்தினுல் நிவர்த்தியைத் தேடிக்கொள்ளலாம்.

சட்டத்தினுலேற்படுஞ் சுதந்தரங்களுக்கும் சன்மார்க்கவியல்பினுலேற்படுஞ் சுதந்தரங்களுக்குமுள்ள வித்தியாசத்தை யெடுத்துக்காட்டுவதில் துரைத்தனநூலிற் பயின்ற சிலர் இப்பொழுதெடுத்துக்காட்டிய பலாத்காரத்தையே விசேஷமாகிய குறியென்று சொல்லியிருக்கிறுர்கள். இது சரியன்று. ஏனெனில், சுதந்திரங்கள் தெளிவாய் விவரிக்கப்பட்டு சட்டநிபந்தனைகளிற் சேர்க்கப்பட்டபிறகுதான் அவைகளை மறுப்பவருக்குத் தண்டனை யேற்படுகின்றது. மேலும் சிலவிடங்களில் சன்மார்க்கவியல்பினுல் எற்படும் நிர்ப்பந்தங்களையும் சுதந்தரங்களையும் தெளிவாய்க் குறித்துக் காட்டலாம்; அவைகளாற் கட்டுப்படாதவரை நாம் தண்டனைக்கு முட்படுத்தலாமோ? உதாரணமாக, நமக்குபகாரஞ்செய்பவர்க்கு நன்றியைச் செலுத்த நாம் கட்டுபட்டிருக்கிறேம்; நன்றியைச் செலுத்தாதவருக்கு தண்டனையில்லை, அவரைப் பலாத்காரமாய் நன்றியைச் செலுத்தும்படி கட்டாயப்படுத்த வழியுமில்லை. சன்மார்க்கவியல்பினுலேற்படும் நிர்ப்பந்தமுமில்லை யென்று சொல்லலாமோ? வேசிகள் பொதுவாய்ப் புருஷருக்குத் தம்முடலை விற்றல்போன்ற, சன்மார்க்கவியல்புக்கு விரோதமான சில செய்கைகளுக்கும் சிலதேசத்திய சட்டத்தினுல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கின்றது. இப்படி தண்டனைக்குட்படுத்துவதாகிய பலாத்

காரத்தினுல் மாத்திரமே இப்பொழுதுகூறிய சில நூலாசிரியரின் சித்தாந்தப்படி அச்செய்கைகள் தியவென்று சொல்லலாம்; அவர்கொள்கைப்படி மானிடவியல்புக்கு விரோதமென்று சொல்லக்கூடாது. இவ்வபிப்பிராயத்தை யொருவரும் ஒத்துக்கொள்ளார்.

இதில் முடிவா யறியவேண்டியது யாதெனில், எவ்விதச் சட்டங்களில்லாவிட்டால் மனிதரின் சங்கத்திற்குச் சீர்திருத்தமும், அதிலடங்கிய ஒவ்வொருவருக்கும் அவருடைய சன்மார்க்கவியல்பைப் பரிபக்குவத்திற்குக் கொண்டுவரச் சக்தியுமில்லாது தீருமோ, அச்சட்டங்களை நிர்ணயித்தற்கு மானிடவியல்பை யுண்மையாக அறிதலால் குறிப்பாய் விளங்கும் சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் ஆதாரமாகின்றன. ஏனெனில், மானிடசுபாவத்திற்குரிய சக்திகளைப் பலகாரியங்களிற்செலுத்த சுதந்தரமும் நிர்ப்பந்தமுமில்லாதிருந்தால் ஒவ்வொருவனும் அடிமையாய்த்திரிந்து தன் நற்குணங்களை யபிவிர்த்திசெய்யாது நாளடைவில் கெடுவான். சங்கத்திற் சேர்ந்தவர்களுக்கு நன்னடையுண்டாகும்படி சங்கத்தின் பலாத்காரத்தால் ஒவ்வொருவனும் தன்சுதந்திரங்களையும் நிர்ப்பந்தங்களையும் நிறைவேற்றத் தூண்டப்பட்டுக் கடைத்தேறுவிட்டால் அச்சங்கம் நாளுக்கு நாள் நாகரீகத்தில் அபிவிர்த்தி யடையாது. இதன்றி மனிதரின் நற்குணமும் ஊக்கமுங் குன்றி நாளுக்குநாள் சோம்பேறித்தனம் அதிகரித்து விலங்கினத்திற்குரிய குணங்களை மேற்கொண்டுவிடுவார்கள்.

12. ஊண், உடை, உறைவிடம் முதலியவை மனிதரின் பொதுவான சுபாவத்திற்குரியவை யாதலால் சொத்திற் சுதந்திரத்தைக் கொண்டாடுகிறுர்கள். அச்சுபாவம்மாறி ஊண், உடை முதலியவைகளை விரும்பும் அவா நீங்கினுல் தம்சொத்து பிறர்சொத்தென்னும் தாரதம்மியம் நீங்கிவிடும். மனிதர் வெவ்வேறுய்த் தனித்து வசித்துவந்தால் சுதந்தரங்களிராவென்பது உறுதி. சுதந்தரங்களைப்பற்றிய மேற்குறித்த சித்தாந்தமானது சங்கமாய்க்கூடி வாழும் மானிடசுபாவத்தை ஆதாரமாகக்கொண்டிருக்கிறது. இல்லாவிட்டால் சொத்தேது, குடும்பமேது, விவாகமேது. இவை யில்லாவிட்டால் சுதந்தரங்களுண்டோ, நிர்ப்பந்தங்களுண்டோ? எல்லாமனிதருக்கும் சகவாசமும் பொதுவான எண்ணங்களும் விருப்பங்களும் இயற்கையாயிருத்தலால், தம்மிற்சமாதானத்தோடும், சுகத்தோடும், துன்பத்தை விளைக்கும் வீணுன தடைகளின்றியும்வாழ்தற்குவெளிப்படையாய் விளங்கும் சுதந்தரங்கள் ஒவ்வொருவருக்குமின்றியமையாவென்று விளங்குகின்றது. எச்சங்கத்தில் சுதந்திரங்களும் நிர்ப்பந்தங்களுமில்லையோ அங்கே சகவாசமுஞ் சுகமுமிரா. சகவாசம் மனிதற்கியற்கையாதலால், அவ்வியற்கையை நடபடிக்கையிற் செலுத்தி பக்குவப்படுத்துவதற்கும், இதனுல் இம்மை மறுமைகளிற் சித்திக்கும் சுகானுபவத்திற்கும் மனிதருக்குச் சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் ஏற்படுகின்றன.

13. சுபாவிகமாகிய சுதந்தரமென்பது நமக்கிப்பொழுது நன்ருய்விளங்குகின்றது. நம்முடைய சுபாவத்திலிருந் துற்பத்தியாய் வளர்ந்து நாம் கடைத்தேறவேண்டியதற்கு அவசியமாயிருக்குஞ் சுதந்திரங்களுக்கே சுபாவிகமாகிய சுதந்திரங்களென்று பெயர்.

மனிதர் ஒரொழுங்குக்கு முட்படாது மிருகங்களைப்போல் காட்டுத்தன்மையில் ஆதியில் சுயேச்சையாய் வசித்திருந்ததாகவும் அச்சுபாவிக நிலைமையில் மனிதருக்குள் வழங்கிய சுதந்தரங்களே சுபாவீக சுதந்திரங்களென்றும் நூஸ்ஸோ என்பவர் அபிப்பிராயப்பட்டிருக்கிறுர். மனிதர் எக்காலத்தும் காலதேச வர்த்தமானத்திற்குத் தக்க வொழுங்குகளுக் குட்பட்டிருந்ததாய்க் கொண்டால், இப்பொழுது நடபடிக்கையிலிருக்குஞ் சுதந்தரங்களுக்குள்ள மூலாதாரம் மாய்ந்துவிடுமென்றெண்ணங்கொண்டு இவ்வாறுள்ள சித்தாந்தத்தை இவரும் பிறர்சிலரும் கைக்கொண்டதாய்க் காணப்படுகிறது. இவருடைய எண்ணங்களையும் நோக்கங்களையுங் குறித்து நாம் கவனிக்கவேண்டியதில்லை. உண்மை யெதுவென்று மாத்திரமே நாமாலோசிக்கவேண்டியது. அப்படி யாலோசிக்கையில், இவரால் விவரிக்கப்படும் சுபாவீகநிலையொன்று ஆதியில் மனிதருக்குள் வழங்

கியதாய்ச் சொல்லத்தகுந்த காரணங்களில்லை. (1) ஒவ்வொருமனிதரும் தனித்து சுயேச்சையாய் ஒரு ஒழுங்குக்குமுட்படாமல் எக்காலத்துமிருக்கவில்லை. பூர்வத்தில் மனிதர் குடும்பத்தினொழுங்குக்குட்பட்டும், அதினாற் பாதுகாக்கப்பட்டும் வசித்துவந்தார்களென்றும், அதற்கும் முன் ஒருகாலத்தில் வேறொருநிலைமை வழங்கியதாய்ச் சொல்ல நமக்கொருவிதமான ஆதாரமுமில்லையென்றும் ஸர் ஹென்றிமேயின் என்பவர் விளக்கிக்காட்டி ஸ்தாபித்திருக்கிறார். (2) நாகரீகமில்லாத ஆதிமனிதர் வேறுநிலையில் வசித்திருந்தாலும் தற்காலத்து விளங்கும் நிலைமையில் மனிதர் தம்மில் கையாட்சிக்குக்கொண்டு வரவேண்டிய சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் இன்னவென்று மாத்திரமே நாமறிய வேண்டியது. மனிதருள் முன்வழங்கிய தாழ்ந்தநிலைமையின் இலக்கணங்களால் தற்காலச் சுதந்தரங்களும் நிர்ப்பந்தங்களும் வேறுபடுவதில்லை. தற்காலத்தில் சுபாவிகசுதந்திரங்களென்றால் இப்பொழுதுள்ள சங்கத்தினிலக்கணத்திற்குத் தக்கபடி மனிதர் சுகானுபவம்பெற்று கடைத்தேற நடப்டிக்கையிலிருக்கவேண்டிய சுதந்திரங்களும் நிர்ப்பந்தங்களுமேதவிர வேறில்லை.

**14.** மேற்கூறியதைக்கொண்டு வரவர நாகரீகம் விருத்தியடைவதால் சுதந்திரங்களும் நிர்ப்பந்தங்களும் விருத்தியடைந்து உறுதிபெற்று வந்திருக்கின்றனவென்று நிச்சயிக்கலாம். ஆதியில் ஒவ்வொருகுடும்பத்திற்குமாத்திரம் சமுதாயத்தில் சுதந்தரங்களிருந்ததாகத் தெரிய வருகிறது. எல்லாமனிதருக்கும் பொதுவாகிய சுபாவத்தை யாதாரமாகக்கொள்வதினால் ஒவ்வொருவருக்குஞ் சுதந்தரங்களுண்டென்றும், அச்சுதந்தரங்களை நடபடிக்கைக்குக் கொண்டுவருதலால் மாத்திரமே மனிதரின் நற்குணங்கள் பரிபக்குவமடையுமென்றும் பூர்வீகர்களுக்குக் கொஞ்சமும் ஞானமில்லை. ஒருவனுக்குத் தீங்குநேரிட்டால் அவன் சேர்ந்த குலத்திற்குமாத்திரமே அத்தீங்கு செய்யப்பட்டதாய்ப் பாவித்து அக்குலத்திற்குச் சமுதாயத்தில் பரிகாரஞ் செய்வது அக்காலத்தில் வழக்கம். கிரேக்க ராச்சியங்களிலும் ரோமாபுரிராச்சியத்திலும் ஆதிகாலத்தில் ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்நாளைக் கழிக்கும்மாதிரியைத் திட்டப்படுத்திக்கொள்ளுவதில் தனக்குச் சுதந்திரங்களுண்டென்னும் அறிவில்லாதும் அதைச் செலுத்தும்முயற்சி யில்லாதும் ராச்சியத்தின் சமுதாயசுகத்திற் கேற்பட்டிருக்கும் நிபந்தனைகளுக்குட்பட்டே எல்லாருமநடந்து வந்தார்கள். அவருக்குள் ஒவ்வொருவருக்கும் மற்றெவராலும் மறுக்கக் கூடாத சுதந்தரங்களில்லை. குடும்பத்தின் தலைவனான குலபதிக்குள்ள இவ்விதமான சுதந்திரங்கள் ஸ்தானபலத்தால் மாத்திரமே உண்டாயிருந்தன. ஆகையால் மனிதருக்குப் பொதுவாயிருக்குஞ் சுபாவமின்னதென்றும், அச்சுபாவத்தின்மேன்மையின்னதென்றும் அச்சுபாவத்தை வளர்க்கவேண்டிய ஆவசியமும் வளர்த்தற்குரிய மார்க்கங்களு மின்னவையாமென்றும் உள்ளஞானம் காலக்கிரமத்தில் மனிதருக் குண்டாவதினால், சுதந்தரங்களும் அவைகளுக்குத்தக்க நிர்ப்பந்தங்களும் நாளடைவிலதிகரித்து பக்குவத்தையடைந்தன.

(இன்னும் வரும்,)

கி. சுந்தரராமன், எம். ஏ.

---

## புஸ்தகவாசிப்பு.

### புஸ்தகத்தேர்வு.

புஸ்தக வாசிப்பில் கவனிக்கவேண்டிய முக்கியமான முதல்விஷயம் புஸ்தகத்தெரிவு என்கலாம். "தீனி அறிந்து தின்றால் பிணியில்லை" என்றோர் பழமொழி உண்டு. அதின்படி ஒருவன் தான் இன்னது அருந்தத் தகும், இன்னது தகாது என்று அறிந்து, தகாததைத் தள்ளித் தக்கதைப் புசித்துவந்தால் அவன் தேகம் நோய்க்கு இடமாகாதாம். அதுபோல அறிவீனம் என்னும் பிணிநீங்கி அறிவு என்னும் சுகம் வர்த்திக்க* புஸ்தகம் தெரிந்து வாசிப்பது அத்தியந்த முக்கியம். உலகத்தில் புஸ்தகங்கள் காணவும் கிடையாமல் அருமையாயிருந்த காலங்கள் உண்டு. பூர்வீகத்தில் எழுத்துக் கருவிகள் சொற்பம். எழுத அறிந்தவர்கள் அதிலும் சொற்பமாயிருந்தார்கள். ஆகையால் சில புஸ்தகங்களின் பிரதி, நகரத்துக்

* வர்த்தித்தல்=வளர்தல்.

கொன்றும், நாட்டுக்கொன்றும், ராச்சியத்துக் கொன்றுமாய் மாத்திரம் இருந்தது. சிலவேளை களில் ஒருபுஸ்தகம் ஒரு ராச்சியமெங்கும் தேடியும் கிடையாமல், அயல் ராச்சியங்களில் விசாரித்தடையும்படியாக அரசர்கள் ஒருவருக்கொருவர் கோலாகலமாய் ஸ்தானபதிகளை அனுப்புவார்கள். அங்கிலேய தேசத்தில் அக்காலத்தில் ஒரு பட்டணத்தார் யாவரும் சேர்ந்து ஒரு புஸ்தகம் வாங்கி, அதை குறிக்கப்பட்ட ஸ்தலத்தில் சங்கிலியால் மேசையில் மாட்டி வைத்திருப்பார்கள். அந்தை இஷ்டமுள்ளவர்கள் போய் வாசிப்பார்கள். இப்போது கால்ரூபாய்க்குக்கிடைக்கும் ஒருபுஸ்தகம் அப்போதுஆயிரத்துச்சில்வானம்* ரூபாய் கொடுத்தாலும் கிடையாது. அறுநூறு வருஷத்துக்கு முன் பேர்பெற்ற அங்கிலேய சமஸ்த வித்யாசாலையாகிய ஆக்ஸ்போட் (*Oxford*) கல்லூரியின் புஸ்தகசாலையில் ஐந்தாறு சிறு நூல்களை மாத்திரம் ஒரு சின்ன பெட்டிக்குள் வைத்துப் பூட்டிப் பெட்டிக்குச் சங்கிலிமாட்டி யிருந்தது. அஞ்ஞூற்றறுபதுஆண்டுகளுக்குமுன் பிரான்ஸ் தேசத்து அரசனின் வசம் நான்கு இலக்கிய சுவடிகளும் சில ஜெப புஸ்தகங்களும் மாத்திரம் காணப்பட்டன. தேவர்களின் சொரூபங்களை கையில் புஸ்தகம் ஏந்தின பாவனையாய்ச் சித்திரிப்பது அவர்கள் ஐசுவரிய சம்பன்னர் என்பதற்குக்குறிப்பாயிருந்தது. செய்யுட்களின் பிரதிகள் கடனாக விலைபெற்ற ஈடுகள்பேரிலும், விலையாக முக்கியவான்கள் முகனையில் எழுதப்பட்ட உறுதியான தஸ்தாவேஜுகளின் பேரிலும் கொடுக்கப்பட்டன. கல்வி வாஞ்சையுற்றவர்கள் கடல் மலை என்று பாராமல் அநேகவருஷமாய், தேசாந்திரம்போய் வருந்தி அறிவைச் சம்பாதித்தார்கள். இந்துதேசத்தில் உண்டாயிருந்த புஸ்தக வறுமைக்கும் மதிப்புக்கும் அநேக திர்ஷ்டாந்தங்கள் சொல்லலாம். சுவடிகளைக்குவித்துச்சரஸ்வதிபூஜைசெய்வதுநாள்துவரை சகஜமே. ஒரு சுவடி எழுதி முடிந்தவுடன் அதைப் பல்லக்கில் ஏற்றிக் கீத வாத்திய முழக்கத்துடன் வெகு ஆடம்பரமாய்ப் பட்டணப்பிரவேசம் செய்விப்பார்கள். சுவடிகளின் முதல் ஏட்டில் "இந்தச் சுவடியை ஒருவரும் திருடக்கூடாது. திருடினல் கங்காதீரத்தில் காராம்பசுவைக்கழுத்தறுத்த தோஷத்திலபோவாராகவும்" என்ற அல்லது அதற்குச்சமனான வாக்கியம் வரைந்திருக்கும். இந்துக்களுக்குள் முந்தியகாலங்களில் நூல்களை இரவல் கொடுக்கிறதேயில்லை. பெற்றார் தங்கள் பிள்ளைகளுக்கு முதலாய் மரணப்படுகையில் அந்நியருக்குக் காட்டுவதில்லை என்ற ஆணையின்பேரில் அவைகளை ஒப்புவிப்பார்கள்.

அச்சடித் தொழிலாகிய அதிசய வித்தை வெகுகாலத்துக்குமுன் சீனதேசத்தில் ஒருவாறு அறியப்பட்டிருந்தாலும், ஜர்மானிய தேசத்தில் கிறிஸ்தாப்தம 1444-ம் வருஷத்தில் அபிவிர்த்தி செய்யப்பட்டது. அதுமுதல் உலகம் புஸ்தகப்பிரளயமாயிற்று. அங்கிலேய,பிரான்ஸிய, ஜர்மானிய பாஷைகளில் பிரசித்தமாயிருக்கும் நூல்களுக்குக் கணக்கில்லை. இரண்டு வருஷத்துக்குமுன் இயற்றிய ஓர் கணக்கின்படி தமிழ்ப்பாஷையில் சுமார் நாலாயிரம் புஸ்தகங்கள் அச்சிட்டு தற்காலம்வரை பிரசுரமாயிருக்கின்றன. அவைகள் எல்லாம் வாசிப்புக்கு அனுகூலப்பட்டவைஎன்றுசொல்லஏதுவில்லை.

"கல்வி கரையில, கற்பவர் நாள்சில ;
மெல்ல நினைக்கிற் பிணிபல; தெள்ளிதின்
ஆராய்ந்தமைவுடைய கற்பவே, நீர் ஒழியப்
பால் உண் குருகிற்றெரிந்து,"

என்ற மூதுரைப்படி, கல்வி வரையறைப்படாததினலும், அத்தனை முற்றக் கற்பதற்கு ஆயுள் நீடித்திராமையாலும், கற்பவர் சரீரமோ பிணிக்கெல்லாம் பிறப்பிடம் ஆகையாலும், "கண்டது கற்க பண்டிதன் ஆவான்" என்ற சாமானிய வாசகத்தை நம்பி, கடை மாணுக்கருக்கு உபமானமாகிய ஆடானது கண்ணுக்குத்தென்பட்டதையெல்லாம் ஓர்வாய் கடித்தாற்போல், கண்டதெல்லாமாகிய வாசிப்புக்கு உதவாத தந்தனப்பாட்டும், ரஞ்சனக்கூத்தும்,காமத்தை, கர்வத்தை, கபடத்தை, குரோதத்தை ஜெனிப்பிக்கத்தக்க வீண் கதைகாவியங்களும் அடங்கிய அற்பநூல்களை வாசித்துப் பொழுதுபோக்காமல், தலைமாணுக்கருக்கு இணையாகி நீரைப் பிரித்து பாலைப்பருகும் அன்னப்பட்சியைப் போலச் சாஸ்திரங்களினது விசேஷ சாமானிய

* 'ஆயிரத்துச் சில்லறை' என்றும் வழங்குவார்கள்.

சாராம்சம் அமைந்த நல்லபுஸ்தகங்களைத்தெரிந்தடைந்து வாசிக்கவேண்டும்.

வாசிப்புக்கு உபயோகமான புஸ்தகங்கள் யாவருக்கும் ஒரேவகையாய் இருக்கக்கூடியதல்ல. ஒரு வியாபாரிக்கு வேண்டிய புஸ்தகங்கள் யாவும் ஒரு வைத்தியனுக்கு உதவா. ஒரு வைத்தியனுக்கு அகத்தியமான யாவும் ஒரு வைதீகனுக்கு வேண்டியிரா. ஆகையால்யாவருக்கும்பொதுவில் அவசியமான நூல்களோடு, அவரவர் தொழில் துறைக்கு ஏற்ற நூல்களைத் தெரிந்துகொள்ள வேண்டியது. இவ்விஷயத்தில் ஸ்ரீ ஜான் லூபக்கு (*Sir Jhon Lubbock*) என்பவர் செய்ததை நாம் பின்பற்றத்தக்கது. அவர் தமக்கு அவசியமான கல்வித்துறைகளில் சிரேஷ்டமான நூறுபுஸ்தகங்களை மாத்திரம் தெரிந்து சேர்த்துவைத்து, அவைகளை வாசித்து வந்தார். கார்லைல் (*Carlyle*) என்னும்வித்வான்சொல்லுகிறார்:— "நமது காலத்திலுள்ள யதார்த்தமான சர்வகலாசாலை யாதெனில், புஸ்தகங்களின் ஓர் கூட்டமே. இந்த புஸ்தக சேர்மானம் எச்சரிக்கையுடன் செய்யப்படவேண்டியது. மேலும் வேளைக்குவேளை அதில் களைபிடுங்கவேண்டும். அதாவது பிரயோசனம் குறைந்த நூல்களை நீக்கிவிடவேண்டும்" என்பதே.

எத்தேசத்திலும் வழங்கிவரும் புஸ்தகங்களின் குணதோஷங்களைப் பொதுப்படக் கவனிக்குமிடத்து, இக்கன்ம பூமியில் நல்லோர்குறைவும் தீயோர் மிகுதியுமாய் இருக்கிறதுபோல, நல்ல புஸ்தகங்கள் சிலவும் பொல்லாத புஸ்தகங்களோ பலவுமாய்க்காணப்படுகின்றன.

புஸ்தகங்களை உத்தமம், மத்திமம், அதமம் என்று மூன்று வகையாய் வகுக்கலாம். அவற்றில் சுத்த அப்பிரயோசனமும், அருவருப்பும், தொட்டோர் கேட்டோர் பார்த்தோர் மனங்களில் நித்திய கெடுதியை பிறப்பிக்கத்தக்கதுமான அதம நூல்கள் உலகத்துக்குக் கேடாய் உற்பத்தியாயிருக்கின்றன என்பதற்கு சந்தேகமில்லை. ஒருபெரியவர் குறித்தபடி, இவ்வுலகத்தில் தீமைக்கிடமாகிய விஷ சர்ப்பங்களும் காய்கனிகளும், பொது மாதரும் கண்ணுக்கு அதிக பகட்டாய்த் தோன்றுவதுபோல், அதம புஸ்தகங்களும் உத்தம நூல்களைப் பார்க்கிலும் சாதாரணமாய் அதிக சொற்சிறப்புற்றவைகளாய், நாவுக்கு நயத்தையும் செவிக்கு இன்பத்தையும் கொடுக்கிறவைகளா யிருக்கின்றன. அவைகளில் அமைந்திருக்கும் பொருட்களோ ஆத்துமாக்களை சிற்றின்பம் அவபக்தி என்னும் மீளாக்கயத்தில் ஆழ்த்தி நித்தியநாசத்தை வருவிக்கத்தக்கவைகள். எத்தனையோ மனுக்கள் இவற்றால் நரகத்துக்கு இரையாய்ப் போனார்கள்! இவைகளை இயற்ற தங்கள் ஜீவநாள் முழுவதையும் போக்கின வித்துவான்களும், இவற்றைஅச்சடித்து கடைகளில்வைத்தும், ஊர்தோறும் திரிந்தும் விற்பனை செய்கிறவர்களும் உலகத்துக்கு உபகாரிகளாவார்களா? அவர்கள், கஞ்சா, அபின் என்பவற்றின் வியாபாரிகளுக்கு ஒப்பானவர்கள் என்கலாமே. அப்படியிருக்க இளைஞர் இவைகளின்பேரில் ஆசைகொள்ளத்தக்கதாக இவைகளைப் பாடிப் புகழ்ந்து காண்பிக்கும் பெற்றோரும் மற்றோருமோ எத்தன்மையானவர்கள் என்று சொல்லலாம்? இத்தேசத்தவருக்குள் நடமாடி வரும் இவ்வகை தீய நூல்கள் அநேகத்தின் பேர் விவரங்களை விளம்பக்கூடும். ஆகிலும் "தீயார் குணங்கள் உரைப்பதுவும் தீதே" என்றபடி அவற்றின் நாமங்களை இச்சபையில் கூறுவதும் கேட்பதும் முதலாய் ஒருவேளை பெரும் கேட்டுக்கு ஏதுவாகும் என்ற பயத்தால் அவைகளைப்பற்றி அதிகம் விவகரிக்காமல் இம்மட்டில் நிறுத்த வேண்டியதாயிருக்கிறது.

மத்திம புஸ்தகங்கள் விஷத்துளிகள் கலந்த நிறை பாற்குடம்போலும், மணலோடு விரவின அரிசிபோலும், நல்விஷயங்களும் தீயவிஷயங்களும் அமைந்தவைகளாயிருக்கின்றன. இவற்றால் என்னபயன்? பத்து சுகதேகிகளிடையில் ஒரு சுகவீனன் சேர்ந்திருந்தால் அவர் சுகம் இவனுக்கு கிடையாது. இவன் தொத்துநோயோ அப்பத்துப்பேரையும் தாவி வாதிக்கும். அதுபோல இவ்வகை புஸ்தகங்களாலும் கொடியமோசம் விளையத்தக்கதால் அவற்றை முற்றும் விலக்கிவைப்பது அவசியம். ஒருவர் சொல்லுகிறபடி "இவ்வகையான நூல்களிலுள்ள நன்மை அதி வேகமும் மிக ஆழமுமான ஒரு ஆற்றின் அடியில் அமைந்திருக்கும் சில முத்து

கள்போல் இருக்கிறது. இந்த முத்துக்களுக்காக முக்குளிப்பதில் உயிர்போவது நிச்சயம்.'' தற்காலத்தில் திருவிதாங்கோட்டிலும் மற்றுமுள்ள சாதாரண தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் குற்றாலக்குறவஞ்சி, முக்கூடற்பள், போற்றிமாலை, பதுமைக்கதை, மதனகாமராஜன்கதை முதலியு சுவடிகளும், சர்க்கார் பாடசாலைகளில் பஞ்சதந்திரம் நைடதம் முதலிய நூல்களும் வழங்கிவருகின்றன. அவைகளில் சில சிறந்த இலக்கியங்களே யாயினும், இளைஞர் மனதை கெடுக்கத்தக்க ஸ்திரீ வர்ணனை தந்திரயுக்திகள் முதலிய விஷம் கலந்தவை என்பது யாவருக்குந் தெரிந்த காரியமே.

மூன்றாம் வகையனவாகிய உத்தம புஸ்தகங்கள் தொகையில் குறைவாயிருப்பினும், அவற்றில் நமது ஜீவகாலம் முழுவதும் கற்றுணரத்தக்க போதனைகள் உண்டு. விலங்குகளில் சிம்ஹமும், பட்சிகளில் ஆளியும், தருக்களில் சந்தனமும் ராஜத்துவம் உடைத்தா யிருப்பது போல, புஸ்தகங்களிலும் அதது சாஸ்திரத் துறைகளில் பொருள் நயம், சொல் நயம் முதலிய காரணமாய் அரசாயிருக்கப்பட்ட உத்தம நூல்களுண்டு. அவ்வகைப் புஸ்தகங்களைத் தெரிந்து வாசிக்கவேண்டும். மனிதர் வாசித்தறியவேண்டிய சகல விஷயங்களிலும் ஆத்ம விஷயமே அத்தியந்த முக்கியமானது. இவ்விஷயத்தைக் குறித்து தேசந்தோறும் பல ஆகமங்களுண்டு. அவற்றின் குணகுணங்களை இங்கே உரைத்தல் சமயோசிதமா யிராதென்று விட்டிருக்கிறது.

புஸ்தகங்கள் இவ்வளவு திரளாயிருக்க, அவைகளில் நல்லதின்னது தீயதின்னது என்று பகுத்தறிவதெப்படி என்று சிலர் கேட்கலாம். அறிவது அதிக பிரயாசமல்ல. எப்படியென்றால்,ஒரு புஸ்தகத்தின் லட்சணத்தை,அதைச் செய்தவருடைய தன்மை, நோக்கம் முதலியவைகளை கவனிப்பதினாலும், அவர் செய்திருக்கும் மற்ற நூல்களின் பொது லட்சணத்தைக் கொண்டும், அப்புஸ்தகத்தின் பிரிவுகள் பொருள் அட்டவணைகளை நோக்குவதினாலும், இவைகளினால் விளங்காவிடில் அப்புஸ்தகங்களில் ஒரு பாகத்தைத் திட்பநுட்பமாய்த் வாசிப்பதினாலும் அறியலாம். ஒரு சுருக்கவழி என்னவென்றால் அப்புஸ்தகளைப் பற்றி, நம்மைவிட அறிவாளிகளும் யோக்கியருமானவர்களுடைய அபிப்பிராயத்தை அறிவதே. நல்ல மரங்களும் நச்சுமரங்களும் மிக்கவாயினும், உலகத்தில் பிரத்தியட்சமாய்த் தெரிந்திருக்கிறது போல, சற்குணரான வித்வான்களுக்கு நூல்களுடைய குணதோஷங்கள் களங்கமறத் தெரியுமாதலால் அவர்களைக் கேட்டு உலகப்பிரசித்தமான நலல புஸ்தகங்களை ஐயமின்றி வாசிக்கலாம். நமது தேசத்தில் வழங்கும் பல நூல்கள், ஒரு வித்வான் கூறினபடி, இரண்டும் இரண்டும் ஐந்து என்று பல தாஷ்டாந்த திர்ஷ்டாந்த பூர்வமாய் ரூபித்தாற்போல நியாய விரோதமான பொருள் அடங்கிய அகட விகட கற்பனைக் கவிகளா யிருக்கின்றன. அநேகம் சித்திரக் கவிகளும், வீண்பொழுது போக்குக்கேற்ற விரோதமான கதாப்பிரசங்கங்களும், நாமதேய வர்ணங்களும் அந்தாதிகளுமாய் சொல் விரிந்து பொருளோ மிகவும் சுருங்கியிருக்கிறது. இப்பேர்ப்பட்டவைகளை வாசிப்பதினால் மனசு சாத்வீக சற்குணம் அடையும் என்று கனவிலும் எண்ண ஏதுவில்லை. மேலும் வாசிப்புக்கு உபயோகமான புஸ்தகங்களை தெரிந்து சேர்ப்பதில் மேற்சொல்லியபடி ஸ்ரீ ஜான் லூபக்கு என்னும் வித்வான் அனுசரித்தமுறைமை நாம் உபயோகிக்கத் தக்கது. அவர் தமக்கு அவசியமான கல்வித் துறைகளில் பிரசித்தமாயருந்த சிரேஷ்டமான நூறு நூல்களை ஆராய்ந்து தெரிந்தடைந்து அவைகளை வாசித்து வந்தார். அவர் செய்தது நல்ல யுக்தி.

புஸ்தகங்களை இத்தனை திட்பநுட்பமாய்த் தெரிந்து வாசிக்கத் தேவையென்ன? என்று விசாரிக்க ஏதுவுண்டு. அது மிகவும் அவசியந்தான். எப்படியென்றால் நாம் வாசிக்கும் புஸ்தகங்களின் தன்மைக்குத் தக்கதாகவே நாமடையும் அறிவும், நமது சம்பாஷணைப் போக்கும், எழுத்துப் போக்கும், நமது மனோமுயற்சியும், நமது குணங்குறிகளும் நடபடிகளும், அவற்றால் லபிக்கும் இம்மை மறுமை அனுபவங்களும் ஒருவாறு இருக்கும். மனிதர் பிறக்கும்போது அவர்கள் மனம் அட்சரம்தீட்டாத வெற்றுக் கடுதாசிபோல அறிவின்மை பொருந்

தியதா யிருக்கிறது. ஒரு கடுதாசியில் வரையப்படும் எழுத்துக்குத் தக்கதாக அது ஒரு காசு பெறுததாயும் போகலாம், ஒரு கோடி ரூபாய் பிடிக்கிறதாயுமிருக்கலாம். அதுபோல, நாம் வாசித்துப் பழகும் புஸ்தகங்களின் தன்மைக்குத் தக்கதாக நமது மனதின் பெருமதியும் இருக்கும். ஆகையால் மனம் என்னும் நமது கடுதாசியில் நல்ல நூல்களைத் தெரிந்து அவைகளிலுள்ள நல்ல விஷயங்களைப் பதிக்கவேண்டும். விசேஷமாய் பாலியத்தில் வாசிக்கும் புஸ்தகங்களைக் குறித்து கவனமாயிருப்பது அவசியம். ஏனென்றால், அவைகளால உண்டாகும் அபிப்பிராயங்கள் "இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்றபடி மனதில் பலமாய்ப் பதிந்து ஜீவகால முழுவதும் மனதோடுகூட வளர்ந்து ஸ்திரப்படும். மரப்பட்டைகளிலும் இலைகளிலும் வசிக்கும் அநேக பூச்சிகளின் நிறம் அப்பட்டைகள் இலைகளின் நிறமாகவே யிருக்கும். சுகந்த வாசனை கமழும் பூங்காவனத்தில் உலாவுகிறவர்களுடைய வஸ்திரமும் சுகந்தம்வீசும். பற்பல வியாபார ஸ்தலங்களிலும், 'கோர்ட்டு' கச்சேரிகளிலும், ராஜ சமுகத்திலும் சஞ்சரிக்கிறவர்களுடைய பேச்சு எழுத்துப் போக்குகளில் காணப்படும் பேதங்களுக்கு காரணம் அவரவர் செய்யும் சம்சற்க விகற்பமல்லவா? ஆகையால்,

"கல்லாரே ஆயினும்,கற்ருரைச்சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளும் தலைப்படுவர்,—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிபூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு."

என்றதுபோல நாம் வாசிக்கும் புஸ்தகங்களின் சொல்லே நமது சொல்லாகும். அவற்றின் வாசக நடையே நாம் எழுதும் பேசும் வாசக நடையாகும். தகாத தன்மையுடைய ஒரே புஸ்தக வாசிப்பால் நமது குணங்குறிகள் இம்மையிலும் நித்திய கெடுதியடையக்கூடும். ஆகையால் சொல்லில் பொருளில சிறந்த புஸ்தகங்களையே தெரிந்து வாசித்தல் எவ்வளவோ அவசியம்!

வே. மோசே ஐயர்.

---

## நடுவேனிற் கனவு.

3-ம் அங்கம்.

1-வது இடம்:—காடு; டிடேனியா உறங்கிக்கொண்டிருக்கு மிடம்.

[க்வின்ஸ், ஸ்நக், பாட்டம், ப்ளூட், ஸ்நௌட், ஸ்டார்வெலிங்-வருதல்.]

பாட்டம்:—எல்லோரும்வந்து சேர்ந்தார்களா?

க்வின்ஸ்.—சரியாய் வந்து விட்டார்கள். நாம் சரிபார்த்துக்கொள்ளுதற்கு மிகவும் சௌகரியமான இடம் இங்கு இருக்கின்றது. இப்பசும் புற்றரைதான் நமது அரங்கம்; இச்செடிக்கூட்டம் நமது அணியறை; அரசன்முன் ஆடுவது போல், நாம் அபிநயத்துடன் ஒருமுறை ஆடிப் பார்த்துக் கொள்வோம்.

பாட்டம்.—க்வின்ஸ்,—

க்வின்ஸ்.—வாயாடிப்பாட்டம், என்ன சொல்லுகிறுய்?

பாட்டம்.—இந்தப் பிரமஸ் திஸ்பி கூத்தில் இரசியாத பாகங்கள் சில உள்ளன: முதலாவது, பிரமஸ் தன் வாளை உருவித் தற்கொலை செய்துகொள்ள வேண்டும். அது பார்க்கும் குலமாதர்க்கு இனிக்காது. இதற்கு என்ன பரிகாரம் சொல்லுகிறுய்?

ஸ்நௌட்.—சத்தியமாய்ச் சொல்லுகிறேன்; இதுமிகவும் பயங்கர மானதுதான்.

ஸ்டார்வேலிங்.—எல்லாம் ஆனபின்பு இந்தக் கொலைப்பாகத்தை மாத்திரம் விட்டுவிடல் வேண்டுமென்பது எனது அபிப்பிராயம்.

பாட்டம்.—சிறிதுங்கூடாது; எல்லாவற்றையும் சரிப்படுத்தும் உபாயமிருக்கிறது. இதற்காக ஒரு *முன்னுரை யெழுதி நாம் வாளால் ஒரு தீங்கும் செய்வதில்லை யென்றும், பிரமஸாகிய நான் †சேணியப் பாட்டமே யன்றிப் பிரமஸ் அல்லே னென்றும் அதன் முகமாகத் தெரிவித்தால் அவர்களுக்குப் பயம் தீர்ந்து போம்.

க்வின்ஸ்.—அப்படியே அதை எண் சீரும் அறுசீரும் கலந்த பாவால் எழுதிவிடுவோம்.

---

* கூத்துத் தொடங்குமுன் அவையடக்கமாக அரங்கத்துள்ளோரை நோக்கிச் சொல்லப்படுவது முன்னுரை; கூத்தின் முடிவில், அக் கூத்திலுண்டான குறைகளைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டு கோளாகச் சொல்லப்படுவது பின்னுரை. (இனிவரும் ஐந்தாம் அங்கத்தில் அவற்றைக் காணலாம்.)

† இதற்குமுன்னல் 'காருகப்பாட்டம்' என்று இவன் பெயரை மொழிபெயர்த் துபயோகிக்கப்பட்டது. காருகன் என்பதை விட 'சேணியன்' என்பது எளிதில் விளங்கும் பதமாயிருத்தலால் பின் யோசனையின் மேல் இதை யுபயோகிக்க லாயிற்று.

பாட்டம்.—அது வேண்டுவதில்லை; இன்னும் இரண்டு சீரையும் சேர்த்துக்கொண்டு எண்சீர் எண்சீராகவே எழுதி விடவேண்டும்.

ஸ்நேளட்.—மாதர்கள் சிங்கத்தைக் கண்டு பயப்படார்களோ?

ஸ்டார்வேலிங்.—பயப்படுவார்களென்றே எனக்குத் தோற்றுகிறது.

பாட்டம்.—தலைவர்களே, மாதர்கள் முன்னிலையில் சிங்கத்தைக் கொண்டு வருவதைப்பற்றி நீங்கள் செவ்வையாய் யோசிக்க வேண்டும்; அது மிகவும் பயங்கரமானது. சிங்கத்தைப் போற் பயங்கரமான காட்டுப்பக்ஷியே இல்லை. ஆதலால் நாம் அதற்குத் தக்க சாக்கிரதை செய்யவேண்டும்.

ஸ்நேளட்,—இன்னுமொரு முன்னுரை யெழுதி, அதில் அவன் சிங்கமல்ல னென்று சொல்லிவிடவேண்டும்.

பாட்டம்.—அஃதன்றி அவன் பெயரையும் சொல்லவேண்டும். அவனுடைய பாதிமுகம் சிங்கத்தின் கழுத்தின் வழியாய் வெளியில் தெரியவேண்டும்; அவன் அதின் வழியாய் அடியில் வருமாறு பேசவும் வேண்டும்: "மாதர்களே" அல்லது "சீருள்ள மாதர்களே, நான் விரும்புகிறேன்", அல்லது "நான் வேண்டுகிறேன்" அல்லது "நான் பிரார்த்திக்கிறேன்; நீங்கள் பயப்பட வேண்டுவதில்லை; நடுங்க வேண்டுவதில்லை; உங்களுக்காக என் உயிரைக்கொடுப்பேன். என்னைச் சிங்கமென நினைப்பீராயின் அது எனக்குப் பெருந்துக்கமாயிருக்கும். அப்படிக்கு இல்லை, நான் சிங்க மல்லேன்; மற்றவரைப்போல் யானும் ஒரு மனிதனே." அவ்விடத்தில் அவன் தன் பெயரையும் சொல்லிக் கொள்ள வேண்டும். தான் மூட்டுவேலைக்காரனாக் என்று அவர்களுக்கு வெளிப்படையாய் அறிவிக்கவும் வேண்டும்.

க்வின்ஸ்.—நன்று; அப்படியே செய்வோம். இன்னும் இரண்டு கஷ்டமான காரியங்கள் உள்ளன; நாம் ஆடும் அறைக்குள் நிலவைக் கொண்டுவர வேண்டும்; பிரமஸ்ஸுஸும் திஸ்பியும் நிலவிற் சந்திக்கிறார்கள்.

ஸ்நேளட்.—நமது கூத்து நடக்குமன்று இரவில் நிலவுண்டோ?

பாட்டம்.—பஞ்சாங்கம். பஞ்சாங்கம்! அன்று நிலவுண்டோ? பஞ்சாங்கத்தைப் பார்.

க்வின்ஸ்.—ஆம் உண்டு.

பாட்டம்.—அப்படி யானால், நாம் கூத்தாடும் அறையினது சாளரத்தின் ஓர் கதவைத் திறந்துவைப்போம்; அதன் வழியே நிலவு வரும்.

க்வின்ஸ்.—அப்படிச் செய்யலாம்; அன்றெனின், ஒருவன் *ஒரு கட்டுச்சுள்ளியுங் கையுமாய் ஒரு 'லாந்தரை'ப் பிடித்துக் கொண்டு 'நான்தான சந்திரன்' என்று சொல்லிக்கொண்டு வரவேண்டும். வேறொன்று இருக்கிறது. நாம் ஆடும் அறைக்குள் ஒரு சுவர் வேண்டுமே. அதிலுள்ள துவாரத்தின் வழியாக வன்றோ பிரமஸ்ஸுஸும் திஸ்பியும் பேசிக்கொள்ளுகிறார்களென்று கதையிற் சொல்லப்பட் டிருக்கிறது.

ஸ்நேளட்.—சுவரைக் கொண்டுவர முடியாது. பாட்டம், என்ன சொல்லுகிறாய்?

பாட்டம்.—யாரேனுமொருவன் சுவர்வேஷம் போடவேண்டும்; சுண்ணும்பையோ, மண்ணும் மணலுங்கலந்த சாந்தையோ மேலே பூசிக்கொண்டு சுவராக வரவேண்டும்; அதிலுள்ள துவாரத்திற்காகத் தன் விரல்களை இவ்வாறு காட்டிக்கொண்டும் வரல் வேண்டும். அத்துவாரத்தின் வழியாகவே பிரமஸ்ஸுஸும் திஸ்பியும் பேசிக்கொள்வார்கள்.

க்வின்ஸ்.—அப்படியானால்,எல்லாம் சரியாய் அமைந்து விட்டன. இப்பொழுது எல்லோரும் இருங்கள்; அவரவர்க்குரிய சம்பாஷணைகளைச் சொல்லிச் சரிபார்த்துக் கொள்ளுங்கள். பிரமஸ், நீ தொடங்கு; சம்பாஷணை முடிந்தபின்பு இச்செடி மறைவிற் போ; அப்படியே ஒவ்வொருவரும் தத்தம் §இறுதிச் சொற்குறிப்பை அ

* சந்திரனில் மானோ முயலோ இருப்பதாக இவ்விடங்களில் வியவகார முள்ளதுபோல், தேசாந்தரங்களில் சந்திரனில் ஒரு கட்டுச் சுள்ளியுங்கையுமாய் ஒருமனிதன் நாயோடு இருப்பதாக வியவகாரம் உள்ளது.

§ நாடகத்தில் ஒவ்வொருவனும் முந்திப் பேசுபவன் பேச்சின் இறுதிச் சொல்லைத் தான் பேசத்தொடங்குவதற்கு ஒரு குறிப்பாக ஞாபகத்தில் வைத்துக்கொள்வது வழக்கம்.

னுசரித்துச் சொல்லுவதைச் சொல்ல வேண்டும்.

[பக் மறைவில்-வருதல்.]

பக்.—நமது கந்தர்வ அரசி தூங்கு மஞ்சத்தின் அருகில் இரையும் நாட்டுப்புறத்தோர் யார்? என்ன! கூத்து நடக்கப்போகின்றதோ! நான் அதைக் காண்பேன். காரணங் காணின் நானும் ஆட்டக் காரரில் ஒருவனுகச் சேர்ந்து கொள்வேன்.

க்வின்ஸ்.—பிரமஸ்; நீ பேசு; திஸ்பி, நீ முன்னிற்க.

பாட்டம்,—திஸ்பி, புஷ்பங்களின் வாசனை இனிமையா யிருப்பதுபோல், என் இனிய திஸ்பியே,உன்சூாலும்இனிமையாயிருக்கின்றது. ஒரு சத்தம் கேட்கின்றது, இங்குச் சற்றுநில்; நான் உடனே அதை இன்னதென்று அறிந்து வருவேன். (போதல்.)

பக்.—ஆம் வருவாய், விநோதமான பிரமஸ்ஸாய்த் திரும்பி வருவாய். (போதல்.)

ப்ளுட்.—இப்பொழுது நான் பேச வேண்டுமோ?

க்வின்ஸ்.—ஆம் பேசவேண்டும்; அவன்தான் கேட்ட சத்தத்தைப் பார்க்கப்போயிருக்கிருன். பின்னும் வருவான்.

ப்ளுட்.—பிரகாசித்து விளங்கும் பிரமஸ்ஸே, வெண்டாமரை போல் விளர்த்த மேனியனே, 'ரோஜாமலரை'ப்போற் சிவந்த கன்னமுடையனே, சுறுசுறுப்புள்ள இளைஞனே, ஒருநாளும் தளராத உறுதியுள்ள குதிரைபோல் உண்மையா யிருப்பவனே, உன்னை நான் நைனஸ்ஸின் சமாதியருகிற் சந்திப்பேன்.

க்வின்ஸ்.—அதை நீ இப்பொழுது சொல்லக் கூடாது; பிரமஸ் சொல்வதற்கு மறுமொழியாகச் சொல்லவேண்டும். நீ பேசவேண்டியவற்றை யெல்லாம் ஒரே முறையிற் பேசி விடுகிறுயே. பிரமஸ், நீ வா; உன் இறுதிச் சொற்குறிப்புத் தாண்டி விட்டது. 'உண்மையா யிருப்பவனே' என்பது உன் இறுதிச் சொற்குறிப்பு.

ப்ளுட்.—ஓ! அப்படியோ! ஒருநாளும் தளராத உறுதியான குதிரைபோல் உண்மையா யிருப்பவனே.

[பக்கும் கழுதைத் தலையோடு பாட்டமும் திரும்பி-வருதல்]

பாட்டம்.—நீ என்னை அப்படி அழகுள்ளவனென எண்ணுவா யானுல், நான் என் வாழ்நாள் முழுவதும் உனக்குத் தொண்டு செய்து கழிப்பேன்.

க்வின்ஸ்.—ஓ! இஃதென்ன் விபரீதம்! இஃதென்ன விரூபம்! இது பேய்கள் சஞ்சரிக்குமிடம்போல் தோற்றுகிறது. தலைவர்களே, இவ்விடம்விட்டு ஓடுவோம்! ஓடுவோம்!

(க்வின்ஸ், ஸ்நக், ப்ளுட், ஸ்நௌட், ஸ்டார்வெலிங்-போதல்.)

பக்.—நானும் உங்களோடு வருவேன்; உங்களை முள்ளிலும் செடியிலும் சேற்றிலும் சுற்றித் திண்டாட வடிப்பேன்; சிலவேளை குதிரைபோல் நின்று கனைப்பேன்; சிலவேளை நாய்போற் குரைப்பேன்; சிலவேளை பன்றிபோல் உறுமுவேன்; சிலவேளை தலையில்லாக் கரடிபோல் நின்று கர்ஜிப்பேன்; சிலவேளை நெருப்புப்போல் கொழுந்துவிட்டெரிவேன்.

பாட்டம்.—அவர்கள் என் ஓடுகிருர்கள்? இஃது என்னைப் பயமுறுத்துவதற்காக அவர்கள் செய்யும் புரளியென்று தோற்றுகிறது.

[ஸ்நௌட்-திரும்பி வருதல்.]

ஸ்நௌட்.—ஓ! பாட்டம், நீ மாறினுயே; உன்னிடத்தில் தோன்றுவது என்ன?

பாட்டம்.—தோன்றுவது என்ன?உன் கழுதைத்தலையைக்காண்கிருயோ?(ஸ்நௌட்-போதல்.)

[க்வின்ஸ் திரும்பி வருதல்.]

க்வின்ஸ்.—பாட்டத்துக்கு நன்மையுண்டாகுக.பாட்டம்,உருமாறினுயே.(க்வின்ஸ்போதல்.)

பாட்டம்.—அவர்கள் புரளித்தனத்தை அறிவேன். அவர்கள் இயன்றவரையில் என்னைக் கழுதையாக்கப் பார்க்கிருர்கள். அவர்கள் என்னசெய்யினும் நான் இவ்விடம் விட்டுப் போகேன். நான் அங்குமிங்கும் உலாவி நடந்து கொண்டு அவர்கள் காதுகேட்கப் பாடுவேன்; அதனுல், நான் பயந்தவனல்லனென்று அவர்கள் அறிவார்கள். (பாடுதல்.)

மஞ்சணிற மூக்கின்கண் வாய்ந்த கருங்குருவி
செஞ்சவே யினியவிசை சீரிசையப் பாடிச்
சஞ்சரிக்குஞ் சாரிகையே சார்ந்த களஞ்சிறுத்து
வன்சினைய மென்குழைய மரமேறுங் குருவியே.

டிடேனியா (விழித்து).—எந்த அழகன் என்னை என் புஷ்ப சயனத்தினின்றும் எழுப்புகிறான்?

பாட்டம்.—(பாடுதல்)

1. கூரியமூக் குள்ளவிசைக் குருவியூர்க் குருவியே
சீரியவு மிசைபாடித் திரிவானம் பாடியே.
[ன்பால்
2. குக்கூவென் றிடுகுயிலே குயிலிசைகேட் போரத
மிக்கூரும் வசைக்கெதிரா விளம்புமொழி யுள
தேயோ.

அஃது எத்தனைதான் குக்கூவென்றாலும் அது சொல்வது பொய்யென்று மறுத்துச் சொல்ல முயலும் மாந்தருமுண்டோ?

டிடேனியா.—குணமுள்ள மானிடனே, நான் பிரார்த்திக்கின்றேன்; இன்னும் ஒரு முறை பாடுக. உன் கீதம் என் காதுக்கு இனிமையூட்டுகின்றது. உன் இன்னுருவம் என் கண்ணை மயக்குகின்றது. உன் அழகின் வன்மையால் உன்னைக் கண்ணுற்றபொழுதே யான் உன்வசமாயினேன்.

பாட்டம்.—என் அம்மணி, அவ்வாறுவதற்கு நியாயமில்லையெனத் தோற்றுகிறதே. ஆயினும், இக்காலத்தில் ஆசைக்கு விவேகமில்லை; ஆசையையும் விவேகத்தையும் ஒன்றுசேர்க்க நல்லோர் எத்தனிக்கிறதுமில்லை. இவ்வாறு பொருள் நிறைந்த வார்த்தைகளைப் பேசுவதன்றிச் சமயம் வந்தால் வேடிக்கையான சித்திரப்பேச்சும் பேசுவேன்.

டிடேனியா.—நீர் அழகு நிறைந்தவர் என்பதன்றி ஞானமும் நிறைந்தவரென்று அறிகிறேன்.

பாட்டம்.—இப்பொழுது இக்காட்டைவிட்டு வெளிப்புறப்படுவதற்கு வேண்டிய ஞானமிருக்குமானால் எனக்குப் பெரும் உபகாரமா யிருக்குமே.

டிடேனியா.—இக்காட்டைவிட்டு நீர் போக விரும்ப வொண்ணாது. உம்மை இவ்விடத்திலேயே இருக்கச் செய்வேன். நான் சாதாரண கந்தர்வி அல்லேன்; என் இராசாங்கத்தில் வசந்தகாலம் எப்பொழுதும் நிலைபெற்று நிற்கிறது. உம்மை நான் நேசிக்கின்றேன்; என்னுடன் வாரும்; கந்தர்விகளை உம் பணிவிடைக்கார ராக்குவேன்; அவர்கள் உமக்குக் கடலினின்றும் நவரத்தினங்களையும் கொண்டுவந்து கொடுப்பார்கள், நீர் காம்பரிந்த மலர்ச்சயனத்தி லுறங்க அவர்கள் இனிய கீதம் பாடுவார்கள். உமக்கு இம்மானிட வடிவத்தை மாற்றிக் கந்தர்வ வடிவமைப்பேன். *பயற்றம்பூவே! சிலம்பிக்கூடே! பாச்சையே! கடுகுவிரையே!

[பயற்றம்பூ, சிலம்பிக்கூடு, பாச்சை, கடுகுவிரை, வருதல்.]

பயற்றம்பூ.—இதோ சித்தமாயிருக்கிறேன்.

சிலம்பிக்கூடு.—நானும் அப்படியே.

பாச்சை.—நானும் அப்படியே.

கடுகுவிரை.—நானும் அப்படியே.

எல்லோரும்.—கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கிறோம்.

டிடேனியா.—நீங்கள் இவ்வுத்தமனை உபசரித்து நடக்கவேண்டும். அவர் கண்டு களிக்க அவர்முன் நடனஞ் செய்யுங்கள். அவருக்குத் தேன்கலந்த இனிய கனிவர்க்கங்களால் அமுதூட்டுங்கள். அவர் உறங்குகையில் அவர் கண்ணிமையிற் சந்திரகிரகணம் படாது வண்ணத்திப்பூச்சிச் சிறகால் வீசுங்கள். அவருக்கு எப்பொழுதும் தலைவணங்கி மரியாதை செய்யுங்கள்.

பயற்றம்பூ.—மானிடோத்தமரே, வாழ்க.

சிலம்பிக்கூடு.—வாழ்க.

பாச்சை.—வாழ்க.

கடுகுவிரை.—வாழ்க.

பாட்டம்.—நான் துணிந்து கேட்பதற்கு மன்னிக்கவேண்டும்; நிரம்பக் கேட்டுக் கொள்ளுகிறேன்; உமது பெயரென்ன?

சிலம்பிக்கூடு.—சிலம்பிக்கூடு.

பாட்டம்.—சிலம்பிக்கூடே, உமது நேசத்தை யான் வரவரப் பெருக்கிக்கொள்வேன். என் விரல் வெட்டுண்டபொழுது உமது உதவியை நாடுவேன். பெருமையுள்ள கனவானே, உமது பெயரென்ன?

பயற்றம்பூ.—பயற்றம்பூ.

* இது Pease blossom என்பதின் மொழிபெயர்ப்பு. முன்னால் இதை பட்டாணிப்பூ என்று மொழிபெயர்க்கப்பட் டிருக்கிறது. அதைவிட 'பயற்றம்பூ' என்பதுஎல்லாருக்கும் தெரிந்ததாகவிருக்குமென்று பின்யோசனையில் பட்டதால் அப்படியே திருத்தி உபயோகிக்கப் பட்டிருக்கிறது.

பாட்டம்.—உமது தாயாகிய காய்க்கும் தந்தையாகிய நெற்றுக்கும் நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்லவேண்டும். பயற்றம்பூவே, உமது பழக்கமும் எனக்கு இனி அதிகமாக வேண்டும். ஐயா, உமது பெயர் யாதோ?

கடுதுவிரை.—கடுகுவிரை.

பாட்டம்—ஐயா, உமதுபெறும்பொறுமையை யான் நன்றாய் அறிவேன்; இராக்ஷதன்போன்ற மாட்டிறைச்சி உம்மவரில் அநேகரை விழுங்கியிருக்கிறது; உம்மவருக்காக நான் எத்தனை முறையோ கண்ணீர்விட்டிருக்கிறேன்.

டிடேனியா.—வாருங்கள்; கந்தர்விகாள், அவரை எனது மரமடர்ந்த சோலைக்கு மெள்ள அழைத்து வாருங்கள்.

(போதல்.)

எஸ். நாராயணசாமி அய்யர், பி. ஏ.

## ஹிந்துக்களின் க்ஷயகதி.

கொஞ்சங் கவனித்துப் பார்க்கு மிடத்து, ஹிந்துக்களாகிய நாம் அநேக விதத்தில் நாளுக்கு நாள் க்ஷயமடைந்து வருகிறோ மென்று எளிதில் புலப்படக்கூடும். முற்காலமும் தற்காலமும் நன்றாயறிந்த பெரியோர்களே அவ்வாறு கூறுகிறார்கள். வாழைக்கடிவாழை எப்படி க்ஷயமடைகிறதோ, அதுபோல நாமும் க்ஷயமடைகிறோமென்று அதற்கவர்கள் சமாதானம் சொல்கின்றார்கள். அவ்வாறு கூறப்படும் சமாதானத்தால் க்ஷயமடைதற்கு வேண்டிய சார்பு இயற்கையிலே ஜீவஜடங்கட் கிருப்பதாய் வைத்துக்கொள்ளப் படுகிறது. 'விருத்திக்ஷய' மென்பது ஹிந்துசாஸ்திரத்தின் பொதுசித்தாந்தம்; அதாவது, ஒருகயிற்றை முறுக்க முறுக்க முறுக்கேறி ஓர் மட்டில் வந்தவுடன் மேல் முறுக்கேற முடியாமல் நின்று பிற்பாடு கொஞ்சங் கொஞ்சமாகப்பின் சுழன்று முறுக் கவிழ்ந்து எதாஸ்திதிக்கு வருகிறதுபோல, பிரகிருதியில் 'விருத்திக்ஷயம்' ஏற்பட்டிருப்ப தனுசரித்து ஜீவராசிகளும் சரீரசாரம், அருகம், உன்மானம், மானப்பிரகிருதி முதலியவை சம்பந்தமாய் ஒரு காலத்தில் விருத்தியடைந்தும் மற்றொரு காலத்தில் க்ஷயமடைந்து வருமென்பதாம். இவ்வகை விருத்தி க்ஷயத்தை வெள்ளைக்கார சாஸ்திரிகளிற் சிலருமொப்புக்கொண்டிருக்கிறார்கள். ஹிந்து மகாத்மா ஒருவர்சொல்லிக்கொடுத்தபடி சின்னேட் என்பவர் எழுதியிருக்கும் பௌத்தசார சங்க்ரகத்தில் தற்கால ஹிந்துக்கள் இறங்கும் படியில் அதாவது க்ஷயப்படியில் இருப்பதாய் எழுதி யிருக்கிறார். இவ்வகை அபிப்பிராயத்தால் வெளியாவ தென்ன வெனில் நம்மால் நிவர்த்திக்கமுடியாத இயற்காரணத்தால் நாம் க்ஷயமடைகிறோ மென்பதாம்.

மேற்கண்ட சமாதானமானது எல்லாம் அடக்கி முடிபாக யோஜிக்கு மிடத்து அமையுமென்றாலும், நிவர்த்தியற்ற இயற்காரணம் புலப்படுவது முற்றிலும் நம்முடைய ஆதீனத்திற்கு அதிதப்பட்ட சங்கதிகளாலல்ல; சற்றேனும் நம்முடைய ஆதீனத்திற்குள் அடங்கின காரணங்கள் மூலந்தான். நமக்குள் க்ஷயகதி நேரிடுவது அநேக அம்சங்கள் சம்மந்தமா யாகையாலும் அவைகளைப்பற்றிய காரணங்கள் சிலபொதுவாயும் சில விசேஷமாயு மிருப்பதாலும் ஒவ்வொரு அம்சத்தையும் பிரத்யேகமாக எடுத்து அதின் காரணங்களை விவரித்து வருவது உசிதமென்று நினைக்கிறேன்.

### சரீரபல க்ஷயம்.

முதலாவது சரீரசார க்ஷயம் அதாவது ஹிந்துக்கள் நாளுக்குநாள் பலக்ஷயம் அடைந்து வருகிறார்களென்பதில் சந்தேகமில்லை. இதற்கு முதலாவது காரணம் வறுமை தான். நமக்குள் லக்ஷக்கணக்காக ஜனங்கள் யாதொரு கதியில்லாமல் இரந்து திரிந்து உணவின்றி யிடையூருற்று நித்த நித்தம் கால்கள் கெஞ்ச அலைந்து வருந்தி நிராதாரமாய் பட்டினி கிடக்கிறார்கள்; கோடிக்கணக்கானவர்கள் ஒருவேளை அரைவேளை ஆகாரத்துடன் கண்பஞ்சடைந்து காதடைத்து கன்னமொட்டி, எலும்புந்தோலுமா யிருக்கிறார்கள். சிலரைப் பார்க்கும்போது ஜீவப்ரேதங்கள் போல் காண்கிறார்கள். இவ்வாறுள்ள ஜனங்கட்குள் எவ்வாறு சரீரபலம் இருக்கக்கூடும்.

சென்ற 40, 50 வருஷகாலமாய் நமது துரைத்தனத்தார் கைக்கொண்டு வரும் அரசுமுறைகளால் ஹிந்துக்களுடைய வருமானவழிகள் குன்றி அவர்கட்குள் வறுமை பலவிதத்தில் விஸ்தாரப்பட்டும் ஆழ்ந்தும் வருகிற தென்றும் ஹிந்துக்களுடைய தற்கால வறுமை எவ்வள

வோ பயங்கரமா யிருக்கிற தென்றும மிஸ்டர் டிக்பி முதலிய கனவான்கள் விக்சிதமாக சர்க்கார் ரிபோர்ட்டுகளிலிருந்து காண்பித்திருக்கிறார்கள். நமது துரைத்தனத்தார் கைக்கொண்டு வரும் ராஜதர்மங்கள் எவ்வளவோ சுத்த எண்ணத்தோடு கூடினதாக இருந்தாலும், பலன் நாம் எடுத்துக்காட்டியபடி நாளுக்கு நாள் பெருகி வரும் வறுமையே. துரைத்தனத்தாருடைய ராஜதந்திரங்கள் எவ்வாறிருந்தாலும், ஜனங்களாவது ஒருங்குசேர்ந்து பலவகை முயற்சி செய்தால் நிவர்த்திக்கு வழியுண்டாகும். ஜனங்களும் அவ்வாறு முயல்கிறதில்லை. துரைத்தனத்தாரோ ஜனங்களோ நம்முடைய வறுமையை எவ்வாறு நிவர்த்திக்கக் கூடுமென்று இவிடம் யோஜிப்போமாகில் விஷயம் எவ்வளவோ விரியும்.

நமக்குள் தலைக்கு வருஷவரும்படி சராசரி 15 ரூ க்கதிகம் இல்லை. ஆனால் சில பெரியோர்கள் 27 ரூ யாக பிரஸ்தாபித்து வருகிறார்கள். என்னால் இயன்ற மட்டிலும் கணக்கிட்டு பார்த்ததில் தலைக்கு 27 ரூ எவ்வாறு வருமென்று தெரியவில்லை. தலைக்கு 27 ரூ யென்பது கனவேயல்லாமல் வேறில்லை. தலைக்கு வருஷவரும்படி 10ரூபா ஆகும்போது ஒருநாளைக்கு $5\frac{1}{4}$ பைசா ஆகிறது. அதாவது ஒருநாள் முழுமையும் $5\frac{1}{4}$ பைசா கொண்டு ஒருவன் காலந்தள்ளவேண்டியிருக்கிறது. இவ்வளவு அற்பமுதல் கொண்டு ஜீவிக்கும் ஸ்திரிபுமான்கட்கு என்ன பலமுண்டாகக்கூடும். அவர்கள் மூலம் உண்டாகக்கூடும் சந்ததிகட்கும் என்னபலம் இருக்கக்கூடும்?

வருஷமொன்றிற்கு தலைக்கு 10ரூபா விதம் கிடைக்கப்பட்ட முதல் முழுமையும் ஆகாரத்திற்குச் செலவானால் அந்தமட்டிலாவது திருப்தியுண்டு. ஆனால் அவ்வாறு செலவாகக்காணோம். மேற்கண்ட சொற்ப வரும்படியில் டம்பத்திற்கும் அனாவசியத்திற்கும் சிலபாகம் போவதுமன்றி, செத்த முதலாகிய பகட்டாடையிலும் ஆபரணத்திலும் சிலபாகம் போகிறது. இதனாலும் வறுமை அதிகப்படுகிறது. ஆபரணஞ் செய்து அணிந்து கொள்ளும் பொருட்டு வாயொறுத்து வயிறொறுத்து காற்பசி யரைப்பசியாற்றிக் காலந்தள்ளுவதால் கைகால் செத்து ஆவியடங்கித் தள்ளாடித் தடுமாறி விழும்படி பலங்குன்றுகிறது.

பணம் 'மிச்சம்' பிடிக்க வேண்டு மென்ற ஆக்ரகமுள்ள சில உலுத்தர்கள் வயிற்றுக்குக் கூடசாப்பிடாமல் அவ்வாறு முயல்கிறார்கள். அதனாலும் தேகம் க்ஷீணப்பட்டுப்போகிறது.

நமதுதேசத்தின் சரித்திரத்தை நன்றாய்க் கவனித்த யாவர்க்கும் வியாழ வட்டத்திற் கொருதடவை, அதாவது 12-வருஷத்திற் கொருதடவை பஞ்சம் வந்து நமது ஜனங்களை ஆட்டியலைத்து அல்லோலப்படுத்தி விடுகிற தென்று விளங்குகிறது. இப்படி 12-வருஷத்திற்கு ஒருதரம் வரும் பெரும்பஞ்சத்தைத்தவிர ஆங்காங்கு வருஷந்தோறும் அல்லது இரண்டுமூன்று வருஷங்கட் கொருதடவை வரும் சிறு பஞ்சமும் ஆங்காங்குள்ள ஜனங்களைப் பீடிக்கிறது. பஞ்சகாலங்களில் பட்டினி, பசியாகவும் காலாகராம் அரையாகரா மாகவும், ஒருவேளை யரைவேளையாகவும் காலந்தள்ளி வந்ததினால் உடல் அலைப்புண்ட அநேகர்க்குப்பிணிகள் பிடித்து, மேல் சுபிக்ஷம் வந்தாலும் சக்தி பெறாமல் நித்யதீனர்களாகத்தீர்கிறார்கள். மச்சிடிந்து குச்சாய் முடிந்தபின் குச்சுமச்சாகுமா? ஆகாது.

பால விவாகமும் சரீர பலக்ஷயத்திற்குக்காரணந்தான். ஆடியிலிட்ட வித்தும் அறு நான்கிற் பெற்ற பிள்ளையும் மோசம் போகாதென்பது தொன்று தொட்டுள்ள பழமொழி. புருஷர்க்கு 24-வயசுக்குக்கீழேபிதாஸ்தானம்வரக்கூடாது. தற்காலத்தில் காலக்ஷேபவழி நோக்காமல் எப்படியாவது காலக்ஷேபஞ் செய்யமாட்டோமாவென்ற மூடமதியால் வரம்பின்றி விவாகஞ்செய்து விடுகிறார்கள். அதனால் ஆகாரம் வேண்டும் நூதனவாய்கள் பல்குகின்றனவேயல்லாமல், ஆகாரம் தேடக்கூடும் கைகள் உண்டாகக் காணோம். மட்டின்றி விவாகம் இல்லாமல் இருக்கும்போது கிடைக்கக் கூடிய ஆகாரமானது அவ்வாறு விவாகம் நேரிட்ட பிற்பாடு நூதனமாய் உண்டாகும் சந்ததிகட்கும் விதம்போல் பங்கு போகிற படியால் ஆகாரக்குறைவிற்கும் அது நிமித்தம் தீனத்திற்கும் பலக்ஷயத்திற்கும் காரணமுண்டாகிறது.

பாலவிவாகத்தாலும் வரம்பு கடந்து தத்தம் இஷ்டப்படியும் நிர்ப்பந்தத்தின் மேல் அவிவேகமாகவும் செய்யப்படும் விவாகத்தாலும் நாளுக்குநாள் ஜனத்தொகை விருத்திப்பட்டு வருமான வழிகள் சுருங்கி வருவதாலும் ஹிந்துக்களுக்கு வறுமை அதிகரித்து பலக்ஷயமுண்டாகிறது. பால விவாகத்தால் மாத்திரம்ஒருவேளை பலக்ஷயம் ஏற்படாமல் இருக்கலாம். பாலவிவாகத்தோடு வறுமை சேருமிடத்து பலக்ஷயம் ஏற்படுவது திண்ணமே.

நாம் இப்போது பயப்பட வேண்டியது தற்கால ஜனங்களுடைய பலக்ஷயமல்ல. அவர்களில் அநேகர் திடகாயம்பெற்று திடமாய்வளர்ந்தவர்கள். அவர்கட்குக் கொஞ்சம் பலம் இருப்பது ஆச்சரியமன்று. ஆனால் நாளுக்குநாள்உண்டாகிவரும் சந்ததிகளைப்பற்றித் தான் நாம் முக்கியமாய் பயப்பட வேண்டியிருக்கிறது. தற்காலம் மாறுபாடுள்ள காலமென்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். இக்காலத்தில் பழயதர்மங்களுடைய கடிவாளமும் இல்லை. அன்னிய தர்மங்களுடைய சீர்திருத்தமு மில்லை. இதனால் ஜனங்கள் கெட்டுப்போகும்படியான காரணங்கள் அனேகம். நகையாசையாலும் பணஆசையாலும் உசிதமற்ற விவாகங்கள் பெருகுகின்றன. ஆபரண புஷ்டியும் பணப்புஷ்டியும் பொருந்திய குடும்பத்தில் ஜனித்த சோஞ்சலான வரனுக்கு ஆபரணப் பெருமையும் பணப்பெருமையும் உத்தேசித்துப் பெண்களைக்கொடுக்கிறார்கள். அச்சோஞ்சற் பிள்ளை மூலம் பலமற்ற சோஞ்சற் பிள்ளைகள் பிறக்கின்றன. உயர்ந்த சம்பந்தத்தைக் கருதியும் விஸ்தாரமாய் வரக்கூடும் சீர் சிராட்டத்தைக்கருதியும் சோஞ்சற் பெண்களைக் கொள்வதாலும் கல்லும் மணலும் பொருந்திய சுரட்டு பூமியில் வித்து எவ்வளவு புஷ்டியாய் விழுந்தாலும் பலிதப்படாமல் கரண்டு பொசுங்கலா யுண்டாவது போல், பலக்ஷயமான சந்ததி உண்டாகிறது. நகையாசை நிமித்தமாகவும் பணவாசை நிமித்தமாகவும் கிழவர்க்குப் பெண் கொடுக்கிறார்கள். கிழவர்க்கு இரத்தப்பசையில்லாத சமயம் ஜனிக்கும் பிள்ளைகள் பலஹீனமான பிள்ளைகளாகவே இருக்கவேண்டும். குஷ்டரோகிகளுடைய பெண்,பிள்ளைகளைக்கொள்வதாலும் பதரான பிள்ளைகள் உற்பத்தியாகின்றன. குஷ்டரோகிகளின்சந்ததிகள் வெகுநாள் நீடிக்கிறதில்லை. சீக்கிரம்மரணத்தால் நாசமடைந்து போகிறதென்பது வெகுநாள் அனுபோகத்தின் மேல் ஏற்பட்ட வைத்தியர்களுடைய சித்தாந்தம். அவ்வாறு சந்ததி பலக்காமல் சீக்கிரம் நாசமடையவேண்டிய காரணம் குஷ்டரோகிகளின் வீரியத்திற்கு பலமில்லை. அதில் புஷ்டியாய் ரோகவிஷமும் கலந்திருக்கிறது. அப்படியிருந்தும் குஷ்டரோகிகளின் பெண் பிள்ளைகளைக் கொள்கிறார்கள். இவ்வகை சம்பந்தம் கூடாதென்று மனுஸ்மிருதியில் சொல்லியிருக்கிறது. அதினால் விளையும் பலன் மேன்மேலும் விருத்தியடையக்கூடியபழமல்ல; தீய்ந்தவிந்து குஞ்குளுத்துப்போகக்கூடிய வியாதிபற்றிய கரண்டபிஞ்சு தான்.

ஆடையாபரணச் செழிப்புள்ள சில பெண்கள் கொஞ்சம் சாப்பிடுவது நாகரீகமென்று நினைத்து "வேணுமென்றே" ஆகாரத்தைக் குறைத்துக்கொண்டு தாங்களும் துர்ப்பலமடைந்து தங்கள் குழந்தைகள் அதிலும் துர்ப்பலமாய் ஜனிக்கும்படி நடந்து கொள்கிறார்கள். ஒட்டியாணத்தால் இடுப்பு நெருக்குண்டபெண்கட்கு கெர்ப்ப கலசம் நன்றாய்வளராமல்தடைபட்டு அதில் உற்பத்தியாகும் சிசு புஷ்டியடைய இடமில்லாமல் ஆரம்பத்திலே நசுக்குண்டு துர்ப்பலமடைகிறது முண்டு. ஆடையாபரணங்கள் அணிந்து குஷாலாய் உலாவித்திரியும் சிறுவர்கள் அலங்காரத்திற்குத் தக்கவண்ணம் அவனியில் அனுபோகம் வேண்டுமென்று நினைத்து தாசிவேசிகளைக் கூடி வியாதிகள் சம்பாதித்து வீரிய விரயஞ் செய்தபின்,அதுப்புக்காற்றாமல் சொந்தமனையாளைச் சேர்வதால் வியாதிகலந்து பலங்குறைந்த சிசுக்கள் தான் ஜனிக்கின்றன. அதிசங்கமத்தால் தேகம் துர்ப்பலப்பட்டிருக்குங்காலத்தில் தேகத்தில் ஊர்ஜிதமின்றிப்பிண்டம் போற்கிடந்தாலும், ஆபரணமணிந்து நாகரீகங் கொண்டாடும் பெண்களின் நிர்ப்பந்தத்தின் மேலும் மனோதைரிய மில்லாமையாலும் உண்டாகும் பிள்ளைகளும் துர்ப்பலமே. தாசிவேசிகட்குப்பிறக்கும்சந்ததிகள்பொதுவில் துர்ப்பலமே.

கடனாலுண்டாகும் கவலையும் துர்ப்பலத்திற்குக் காரணம். நமது தேசத்தில் கடனில்லாக் குடும்பங்கள் வெகு சுவற்பம். நம்மவர்களில்

அநேகர் கடன்பாரத்தால் நசுக்குண்டு கண் பிதுங்கி உள்ளதெல்லாம் கடன்காரர்க்கு இரை யாக்கிப்பஞ்சுகூ...ப்படாதவண்ணம்பட்டுக்கவ லைப்படுவதால் மெலிவடைந்து துர்ப்பலப்படு கிறார்கள்.

(இன்னும் வரும்.)

எஸ். இராமசாமி அய்யர், பி. ஏ., பி. எல்.

## மயிலேறும் பெருமாள்பிள்ளை, அவர் உரை.

1. மயிலேறும் பெருமாள்பிள்ளை, யெனப் பெயருற்ற இவ்வாசிரியர் பாண்டி வளநாட்டி லே திருநெல்வேலியென்ற நகரத்திலே, வேளா ளர் குலத்தில் தாண்டவமூர்த்திப்பிள்ளை யென்ப வர்க்குப் புத்திரரா யுதித்தவர். இவர் கல்வி யறிவொழுக்கங்களினாலும், குருலிங்க சங்கம பக்தியினாலும் மிகச் சிறப்புற்றவர். மேலுமிவர் செல்வம், வாணாள், அதிகார முதலிய நலங்க ளிற் கிஞ்சித்தும் தாழ்வில்லாமல் விளங்கியிருந் தவர்.

2. இவருடைய மதமோ சைவமதம். இவர் மரபு சித்தாந்த சைவர் மரபு. இந்தப் புலவர் திலகர் திருக்கைலாச பரம்பரைத் திருவாவடு துறையாதீனத்தைச் சார்ந்த சிஷ்ய வர்க்கங்க ளிற் சிறந்தவர். மேலும் அவ்வாதீனத்திலே அத்தியந்த சிரத்தையும் பிரீதியு முடையவர். ஆகையினாலே ஆதீனத்திற்கு அடிக்கடி வந்து ஞானதேசிகரைத் தரிசித்துக்கொண்டு போகும் வழக்கமுடையவரா யிருந்தார்.

3. இவரிருந்த காலமோ 17-ம் சதாப்தத் தின் இறுதியும் 18-ம் சதாப்தத்தின் தொடக் கமுமாகும். இவர் சுவாமிநாத தேசிகருடைய போதகாசிரியராமாகவே யிவர்க்கு யாம் மேலே கூறிய காலக்கணக்குத் தவறில்லை யென்பது பெறப்பட்டது. எப்படியெனில் விவேகசிந்தா மணி 7-ம் சஞ்சிகையில் வைத்தியநாதநாவலர், சுப்பிரமணிய தீக்ஷிதர், சுவாமிநாத தேசிகராகிய இம்மூவரும் ஏககாலத்தவர்களென்று ஸ்தாபித் திருக்கிறோம். இனிச் சுவாமிநாததேசிகர் நமது மயிலேறும்பெருமாள்பிள்ளையினுடைய மாணாக் கரென்று காட்டப் புகுவோம். இவ்விஷயமா னது, சுவாமிநாததேசிகர் தமது இலக்கணக் கொத்துப் பாயிரத்துள், "தமிழ் வித்தியாகுரு வணக்கம்" என்று பெயரிட்டு, ஐந்தாவது விதி யாகத்

"திருநெல் வேலி யெனுஞ்சிவ புரத்தன்
றாண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்மயி லேறும் பெருமாண் மகிபதி
யிருபத கமல மென்றலை மேற்கொண்
டிலக்கணக் கொத்தெனு நூலியம் புவனே."

யென்று கூறுவதினாலே நாட்டப்படுதல்காண்க.

4. இவர் சுயமாகக் காவியங்கள் ஒன்றுஞ் செய்யாதபோதிலும்,

"கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லா
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி [யிம்
தாமசைத்தார் நூறு தரம்."

என்று பெரும்பான்மையோராற் புகழ்ப்பெற்ற தும், "கல்லாடம் படித்தவனோடு மல்லாடற் படாது" என யாவராலுஞ் சிறப்பித்துச் சொ ல்லப்பட்டதும், நூறு அகவல்கள் அடங்கியது மாகிய இக்கல்லாடத்திற்கு முதன் முப்பத் தேழு அகவல்முழுவதும் உலகத்தார்க்கு எளி தில் விளங்கும் வண்ணம் செவ்விய வுரையொ ன்று வரைந்தருளினர். மீதமுள்ள அறுபத்து மூன்றகவற்கும் உரையெழுதுமுன்னர் நம்புல வர்க்கு இறுதிக்காலம் நேரிட்டது தமிழ் கற்பா ருடைய துரதிர்ஷ்டமோ அன்றோ?

5. இனிக் கல்லாடவுரையின் மகிமையைச் சற்று எடுத்துத் தெரிக்கப் புகுவாம். இவ்வு ரையின்கண் இவருடைய வாசகமெழுதும் ஆற்றலும்[1], சொல்லாட்சி[2]த்திறனும், ஆழ்பொ ருணுணுக்கமும், இலக்கணத் தேர்ச்சியும் நன்கு புலப்படுகின்றன. இப்பொழுது தற்காலத்திலே முற்று முணர்ந்துவிட்டதாக மனப்பால் குடி த்து நாடக நடிக்குஞ் சில போலிப் புலவர்களு டைய உரைகளாகிய மின்மினி போலாது, இக் கல்லாட வுரையோ மலைமேலிட்ட தீபம்போல விளங்குகின்றது. மேலும் *"வறியன் றனக் குரிய வோர்சிறு கந்தையில் அதன் வடிவந்தெ

1. ஆற்றல்=வல்லமை.
2. சொல்லாட்சி=Command of language.

* மதுரை மகாவித்துவான் சபாபதிமுதலியா ரவர்கள் செய்தமெய்ஞ்ஞான பாநு.

ரியாவண்ணஞ் செல்வர் பலரிடத்துஞ் சென்றிரந்து பெற்றபல வண்ணமுள்ள உயர்ந்த ஆடையின் கிழிகளைப் பொதிந்து அது மிகவும் அகன்று நீளுமாறு தைத்துப் பொத்தியபோர்வையாகிய பொந்தைபோலக் கோவைப்பட எழுதற் படாததாயும்,சமானியமாய பலராலுஞ் சொல்லற்படுவதாயும், சில வரிகளிலடங்குவதாயும் ஆழ்ந்து நுண்ணிய பொருளை விளக்க மாட்டாததாயு முள்ள தம துரைக்குத் தொல்காப்பியமுதலிய இலக்கணநூற் சூத்திரங்களையும், சிவஞானசித்தியார் முதலியஞானநூற்செய்யுட்களையும் பல உரையாசிரியர்கள் கூறும் பல அரிய உரைகளையும் . . . . இடைக்கிடை சேர்த்து இது தமதுஉரையெனத் தெரியாவண்ணம் பொதிந்து, ஓர் குழந்தை யிடத்துச் செம்மை, கருமை, பொன்மை முதலிய வன்னங் கிடைத்தவழி அதுவுமோர் ஓவியனே[1]ப்போல், யானை குதிரை முதலிய அந்தக்கேடான[2] சில சித்திரங்களையெழுதி அவற்றை அவ்வன்னங்களாற் பளபளக்கச் செய்தபோது சித்திரத்தியல் புணராதோர் அவற்றைக் கண்டாச்சரியமடையுமாறுபோல சாமானிய சனங்கள் கண்டு ஆச்சரியமடையும்படி" கூறற்படுமுரைகள் போலாது, மயிலேறும் பெருமாள்பிள்ளை யவர்கள் தமது உரையின்கண்முன்னோரியற்றியசெய்யுட்களையுமுரைகளையும் ஆங்காங்கு சிறிது சிறிது எடுத்துக் கூறுதல் முத்துக் கோவைக்குத் தொங்கலாக மாணிக்கம், வயிரம் முதலியவற்றாலாய பதக்கங்களை யமைக்குமாறுபோலா நின்றது. கல்லாடமோ மிகச் சிறந்த நூலென முன்னே குறித்தாமாகவே அதற்கு இத்தகைய நல்லுரை யில்லாதிருப்பின் அதன் கணுள்ள அகவல்களின் பொருளை நன்குணர்தல் மகா துர்லபம். இவ்வுரையினருமை ஏனைய 63 அகவல்களையும் படிக்கும்பொழுதன்றே விளங்கும். கல்லாடத்தின் பொருட் சுவையைப்பற்றி விவரித்தற்கு இது தருணமன்றாதலின் விடுத்தொழிவாம். இவருடைய உரையில் இன்னபாகம் உபயோகமற்றது என்று தள்ளல் முடியாது. இவர் இடைப்பிறவர[3] லாகக்கொண்டு அநேக அகவல்களிற் கஷ்டமான பாகங்களை அர்த்த புஷ்டி நன்கு தோன்றுமாறு விலக்கணங் தந்துரைத்தும், துறைகளொடு அகவலின் தாற்பரியங்களைப் பொருத்திக் காட்டியு மிருக்கின்றனர். இக்கல்லாட வுரையைப் படித்து ஆநந்தித்தல் தமிழ் கற்பார் யாவர்க்கு மிகவு மாவசியகமான காரியம்.

7. இனி யிந்நூற்றாண்டுப் புலவரொருவர் சுப்பராய உபாத்தியாயர் என்பார் 37-வ்து அகவற்குமேல் 60 அகவல்களுக்கு ஏகதேசம் நமது மயிலேறும் பெருமாள்பிள்ளை யுரையைத் தழுவியுரைசெய்து இரண்டையுஞ் சேர்த்துப் பதினைந்து இருபது வருடங்கட்குமுன்னர் அச்சிட்டிருக்கின்றனர். மீதமுள்ள மூன்றகவல்களுக்கும் பொருள் தெரிந்திலவாம். இதினின்று மொருபாகம் விசேஷமாய் திராவிடத்தில் எம். ஏ., பரீட்சைக்குப் போகிறவர்களுக்குப் பாடமாக நியமிக்கப்பட்டு வருதல் ஆங்கிலம் பயின்ற தமிழ் மாணக்கர்கட்குத் தெரிந்திருக்கலாம்.

வி. கோ. சூரியநாராயணசாஸ்திரி.

:o:

## ஆயுள்வேதபாஸ்கரன்.

(219-வது பக்கத்தொடர்ச்சி.)

காலையுமாலையும் ஒவ்வோர் காதமாக வழிநடக்கையில் வழியில் ஒரு விறகு தலையனை எதிர்ப்பட்டான். அவ்விறகு தலையன் எலும்பு மூடிய உடம்பினனாய் இருப்பதைக்கண்டு" ஏட! விறகுதலைய! நீ இப்படி உடல் மெலிந்திருப்பதென்னை?" என்று கேட்க, அவன் "சாமி என்னவோ தெரியவில்லை. இந்தச் சுமையைத் தாங்கினதுமுதலாகக் கொஞ்சங் கொஞ்சமாய் இளைத்து வருகிறேன்" என்று சொன்னான். அதன்மேல் ஜீவகன் இந்தவிறகு சுமையில் ஏதோ அதிசயமிருக்கின்றது என நினைத்து அதனை இருபது பணங்கொடுத்து வாங்கிஅவிழ்த்துப்பார்த்தான். பார்த்தவளவிலே சுமையில் ஒருவகை ஸ்படிகக்கல் இருக்கக்கண்டான். அதுவும் ஒருவன்மேல் வைக்கப்பட்டால் அவன் கொண்டுள்ள நோயின் குணங்குறிகளைத் தெற்றென விளக்குவ தொன்றாக இருக்கவே, அவ்விறகு தலையனுக்குப்பின்னும் பத்துப்பணங்கொடுத்து விட்டு அக்கல்லினைக் கைக்கொண்டு சென்றான்.

சிலநாள் வழிநடந்தபின் ஒருநாள் வழியிலே ஒரு அரிசிமண்டியிலே அளவுகாரன் ஒருவன் அளக்குந்தோறும் அளக்குந்தோறும் கையிலுள்ள படியினால் தலையில் சொறிந்து கொள்வதைக்கண்டு நெருங்கி,

1 ஓவியன்=சித்திரமெழுதுவோன். 2 அழகற்ற.
3 நன்னூல் பொதுவியல் 5-ம் சூத்திரம்.

'ஐயா! அதேன் அப்படி அடிக்கடி சொறிந்துகொள்வது?'' என்று கேட்க, அளவுகாரனும் ''என்னவோ அறியேன் சிலநாளாக என் தலையில் தீராத தினவெடுக்கின்றது'' என்று கூறினன். உடனே ஜீவகன் விறகுசுமையில் கிடைத்த கல்லை அவன்தலையிலே வைத்துப் பார்த்தான். தலையினுள்ளே ஒரு பூரான் இருக்கக் கண்டான். கண்டசெய்தியை அளவுகாரனுக்குரைக்க, அவனும் ''இவன்ஒரு மகா வைத்தியபண்டிதன்போலிருக்கிறது''என்று ஆலோசித்து, ''ஐயா! இதற்கு ஒரு பரிகாரஞ் செய்தால் ஐந்நூறு பணங்கொடுக்கிறேன்'' என்றான். அவனை ஒரு சாணக்குழியிலிருத்திக் கபாலசிகிச்சை செய்து பூரானை வெளிப்படுத்தினன். அளவுகாரனும் ஐந்நூறுபணத்தை எண்ணிக்கொடுத்தான். அதனைஜீவகன் ஆசிரியர் ஆத்திரேயர்க்கு அஞ்சல்* வாயிலாய் அனுப்பிவிட்டான்.

அப்புறம் சிலநாழிகை நடந்தபின்பு வழியில் சிலர் ஒருவனைப் பாடைகட்டித் தூக்கிக்கொண்டு மசானஞ் செல்வதைக் கண்டான். பாடையின்மேல் வளர்த்தி யிருந்தவன் அரோக திடகாத்திரனாய்ப் பீமன்போல் இருப்பதைப் பார்த்து ''இவன் யாதோர் நோயினால் இறந்தவனாகக் காணப்படவில்லை'' என நிதானித்து சுமந்து செல்கின்றவர்களை நிறுத்தி, ''ஐயா! இவன் யாவன்? எங்ஙனமிறந்தான்?'' என வினவினன். அவர்களும் ''என்ன ஐயா! மயானத்திற்குப்போகும்போது வழிமடக்கிக்கேட்கின்றீர்; இனி யாகவேண்டியதென்ன? போம்போம்'' என்றார்கள். ஜீவகனும் பின்னும் பரிந்துகேட்க, அவர்களும் ''ஐயா! இவன் பேர்போன ஒரு மல்லகஜெட்டி; இன்று காலையில் ஒருவனோடு மல்லயுத்தம் செய்தான். விதிவசத்தால் வீழ்ந்து மூர்ச்சித்தான்'' என்று சொல்லிக்கொண்டேசென்றார்கள். ஜீவகன் ''ஆனால் சற்றுக்கீழே இறக்குங்கள் பார்ப்போம்'' என்ன, அவர்களும் இதேது ''காலைச்சுற்றின பாம்பு கடியாமற்போகாது'' என்பதாய் இவன் நம்முடன் விடாமற் போராடுகின்றான். வைத்தியனோஎன்னவோதெரியவில்லை என்று நினைத்துச் சற்று இறக்கிவைத்தார்கள். ஜீவகன் தன்கையில் உள்ள கல்லை அம்மல்லகஜெட்டியின் உடலில் வைத்துப் பார்க்க வயிற்றினுள்ளே குடல்புரண்டிருப்பதைக் கண்டு, அவன்வாயில் ஒரு மூங்கிற் குழையைவைத்து அதனுள்ளே ஒருவகைச்சூரணத்தைப்போட்டு ஊதினன். சூரணமும்உள்ளூரச் சென்று குடலைத் தீண்டின மாத்திரத்திலே குடலும் பழைய நிலைமையை அடைந்தது. அப்போது மல்லக ஜெட்டி உறங்கிவிழித்தவன்போல எழுந்திருந்தான். நடந்த எல்லாவற்றையுங் கேட்டறிந்த அந்த மல்லகஜெட்டி ஜீவகனுக்கு நூறுவராகன்கொடுத்தான். ஜீவகன்அதனை முன்போலவே ஆத்திரேயர்க்கு அனுப்பிவிட்டான்.

அப்புறஞ் சென்று யமுனையாற்றங் கரையைச் சேர்ந்துஆலமரநிழலிலிருந்து இளைப்பாறிக்கொண்டிருந்தான். அப்போதுஆற்றில் நீரோடுகின்ற அழகைப் பார்த்திருக்கையில், ஆற்றுவெள்ளத்தில் ஒரு பிணம் மிதந்திருப்பதைக்கண்டு எழுந்துபார்த்தான். பிணமும் சிரிப்பதாய்த்தோன்ற அவ்வதிசயத்தை நெருங்கிக்காண்போமென்று ஆராய்ந்து பார்க்கையில், பிணத்தின் குதிக்கால் நரம்பினை ஒரு மீனுனது வாயிற்கவ்வி இழுத்துக்கொண்டிருந்தது. அது அங்ஙனம் இழுக்குந்தோறும் பிணமானது கண்திறப்பதும் மூடுவதுமாகச் சிரிக்கின்ற பாவனையாகக் காணப்பட்டது. அப்புறம் ஜீவகன் வழிநடக்கலாகி வேசாலியென்னும் பட்டணத்தைஅடைந்தான். அங்கு ஒரு ஜெட்டியானவன் மற்போர்புரிகையில் கண்ணில் ஒரு குத்துண்டு கண்பிதுங்கிக் கனவருத்த மடைந்திருந்தான். அதுகண்ட ஜீவகன், ''இதற்கென்னசெய்யலாம், இதுமருந்தினலாவதல்ல; ஆயுதசிகிச்சை செய்வோமென்றால் 'கண்ணோ புண்ணோ!' என்றபடி ஆயுதசிகிச்சையினலும் எளிதில் ஆவதுமல்ல. இதனை உபாயத்தினல் தீர்ப்பதே திறமையாகும்'' என்று யோசித்து, ஆற்றில்கண்ட அதிசயத்தை நினைவுகொண்டு, அந்த ஜெட்டியைப்படுக்கவைத்து ஆயுதமொன்றைக்கொண்டு குதிக்காலின் நரம்பினைப்பற்றி வலித்தான். கண்ணும் கண்ணறையிற்று;ஜெட்டியும் தன்னுலியன்றஅளவு தனங்கொடுத்தான். ஜீவககுமாரன் அதனை அப்பதியில் வசிக்கின்ற தன்சிற்றன்னைக்குக் கொடுத்தான்.

வேசாலியில் வசிக்கும் குடியானவன் ஒருவன் தன்காதில் பூரான்கள் புத்திர பௌத்திரபாரம்பரியமாய்க் குடிகொண்டு குட்டிகள் பெருகி நெடுநாளாகப் படாதபாடுபட்டுக்கொண்டிருந்தான். இவன் ஜீவகனுடைய மருத்துவப் புலமையைப் பலர் சொல்லக்கேட்டு அவனிடம்சென்று ''ஐயா! மருத்துவர் மன்னரே! என்னோயைத்தீர்த்தருளல்வேண்டும்'' என்று வேண்டினன். ஜீவகன் ''இதுவரையில் குரு உபதேசத்தின்படியே சிகிச்சைசெய்து வந்தேன்.இனி என் அறிவினுக்குத் தோன்றுந்தோன்றுமாறு சூக்ஷுமப் பிரயோகங்களைச் செய்வேன்'' என்று எண்ணி, நோய்கொண்டவனை நோக்கி ''அப்பா! தழைவேய்ந்த ஒரு குடிசைகட்டி அதனுள்ளே நீலவிறக்கம்பளம் ஒன்றை விரித்து வை. அதனடியில் ஒரு மத்தளத்தையும் தேடிவந்து வைக்கவேண்டும். குடிசையின் அடித்தரையைச் சூடேற்றிவைக்கவும் வேண்டும். நாளைப் பத்து நாழிகைக்கு மேல் நான்வருவேன்''என்று சொல்லியனுப்பினன்

* தபால்மூலமாய்

குடியானவனும் வைத்தியன் சொன்னபடியே எல்லாவற்றையுஞ் சித்தஞ்செய்து வைத்தான். ஜீவகனும் அக்குடிசையை அணுகி நோவாளியைப்படுக்க வைத்துத்தரையில் தண்ணீர்தெளித்து மத்தளத்தை முழக்கினன். உடனேபெரிய பூரானனது இதுதான் இளவேனிற்காலமென்று செவியினின்றும் வெளிப்பட்டது. அதுகண்ட ஜீவகன் சிறிது இறைச்சியைச் செவிவாயில் வைத்தான். அதுகண்டபூரான் மீண்டும் உள்ளுறச்சென்று குஞ்சுகுட்டிகள் யாவற்றுடனே புறப்பட்டுவந்து இறைச்சியில் மொய்த்துக்கொள்ள, உடனே ஜீவகன் அவற்றையெல்லாம் ஒரு சட்டியில் தள்ளிவிட்டான். குடியானவனும் அதனோடு உபத்திரவ மொழியப்பெற்று உற்சாகங்கொண்டு ஐந்நூறு கிரிசுபணங் கொடுத்தான். ஜீவகன் இப்பணத்தையும் சிற்றன்னைக்குக் கொடுத்துவிட்டான்.

அப்பால் அங்குநின்றும் போய் இராஜக்கிரகமே சென்றடைந்து தந்தைதாய் தமயன்மார்களுடனே அளவளாவியிருந்தான். இருக்கும்போது ஒருநாள் ஏழைப்பார்ப்பான் ஒருவன் கஷ்ட சாத்தியமான கண்ணோயுடன்ஜீவகனிடஞ் சென்று தனக்கு ஒரு பரிகாரஞ் சொல்லும்படி வேண்டினன். ஜீவகன் அதிககோபத்துடன் "சாம்பலை அள்ளிக்கண்ணிலேகொட்டிக்கொள் போ! போ!" என்றுசொல்லியனுப்பினன். கபடறியாத அந்தப் பார்ப்பான் அப்படியே செய்தான். நேத்திர உபத்திரவமும் நீங்கிவிட்டது.

ஜீவகன் இங்ஙனமாக விந்தை விந்தையான செய்கைகளைச்செய்து வருகையில், அரசனாகிற பிம்பிசாரன் தலையில் ஒரு கட்டிபுறப்பட்டது. அரசனும் ஆயுள்வேதியர்களையழைத்து "மருத்துவத் தலைவீர்! என் சிரசில் புறப்படுகின்ற பருவினைக்காண்மின்; இதற்குச்சிகிச்சை செய்மின்." எனக்கூறினன். அம் மருத்துவ நிபுணர்கள் "மருத்துவப்புலமை சான்ற ஆசிரியர் அகத்தியனாரும் திருப்பாற்கடலில் திருவுடன்தோன்றிய பகவான் தன்வந்திரியும் கண்டு அழுக்காறடையத்தக்க ஆயுள்வேதியர் பெருமானாகின்ற ஜீவககுமாரபந்தன் இங்கிருக்கஅடியோங்களை அழைத்த காரணமென்ன? அவனைச் சிறுபிள்ளையென்று இகழ்ந்தீரோ! அவன் சூரியன்; அகத்தியராதியோர் சந்திரர்; அடியோங்களும் எம்போலியரும் நக்ஷத்திரங்கள்; அவனைச் சாமானியனாக எண்ணுதீர். தங்கட்குச் சிகிச்சைசெய்யத்தக்கவன் அவனே எனக் கூறிப்போயினர். அப்புறம் அரசன் "தம்மிற்றம் மக்களறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லா மினிது" என்பதை நினைத்து ஆநந்தித்து ஜீவகனை அழைத்துத் தன்நோயைத்தீர்க்கவேண்டினன்.

ஜீவககுமாரன்அரசனாகிய தன் தந்தையைநோக்கி "இந்தக்கட்டியை ஒரு நொடிப்பொழுதில் கண்டித்துவிடுகிறேன், வாருங்கள். நானே என் கையால் உங்களுக்குத் தலைமுழுக்காட்டவேண்டும்" என்று சொல்லி, அரசனை மஞ்சனசாலையில் ஒரு பீடத்தின் மேலிருக்கச் செய்து, கட்டியைப் பழுக்கச்செய்யும் கடுக்காய் முதலிய தைலத்தைத் தடவி, அதன்மேல் ஐந்நூறுகுடந்தண்ணீர் வார்த்தான். அந்தத்தண்ணீரிலும் சில ஔஷதிசாரங்களை ஏற்றிவைத்திருந்தான். இங்ஙனமாகக் குடங்குடமாய்த் தண்ணீரைச் சொரியா நிற்கையில், கட்டியானது பழுத்து விட்டதையறிந்து, ஒருவர்க்குந் தெரியாதபடி, ஒரு சூரியெடுத்துச் சத்திரஞ்செய்து, சீயைப்பிதுக்கி, மீண்டும் முன்போலவே ஐந்நூறுகுடந்தண்ணீரைக் கொட்டினன். சத்திரஞ்செய்த வாயும் மூடிக்கொண்டு ஐந்நூறு குடந்தண்ணீரையும் வார்ப்பதற்குள்ளாகச் சதைவளர்ந்து மயிரும் முளைத்துவிட்டது. அரசன் இதையெல்லாம் அறிந்தவனல்ல; தலைமுழுக்காட்டியாயிற்றே; இனிமேல்தான் சிகிச்சை நடக்கப்போகிறதென்றெண்ணிக் கொண்டிருந்தான். உடனே ஜீவகன் தகப்பனை உண்ணவேண்டினன். அரசனும் உண்டிசெய்தான பின்பு, ஜீவகனைநோக்கி, "இனி நீ செய்யவேண்டிய சிகிச்சையைச் செய்யலாமே" என்றான். ஜீவகனும் "செய்யவேண்டிய சிகிச்சையெல்லாம் செய்தாயிற்றே; இன்னும் செய்யவேண்டுவதொன்றுமில்லையே" என்றான். அதுகேட்ட அரசன் ஆச்சரியமடைந்து அந்தவார்த்தையை நம்பாதவனாய் கட்டி கண்டிருந்த இடத்தைக் கையினால் பலமுறை தடவிப்பார்த்தான். ஒன்றுங்கைப்படவில்லை. பின்னும் நம்பிக்கையற்றவனாய் நிலைக்கண்ணாடியில் தலையைப் பலமுறை திருப்பித்திருப்பிப்பார்த்தான். கட்டியிருந்த இடம் மயிர்முளைத்துக் கிடக்கக் கண்டான். அப்படியும்மனம் நிலைகொள்ளாமல் மனைவி முதலான மற்றவர்களை அழைத்துக்காட்டினன். அவர்களும் கட்டியிருந்தவிடத்தில் மயிரும் முளைத்துப் பழையபடி இருக்கக்கண்டு அதிசயித்தார்கள். மந்திரிமார்களும் மன்னனைச்சூழ்ந்துகொண்டு ஐயா மன்னவர் மன்னனே!

"தந்தைமகற்காற்றுநன்றி அவையத்து
முந்தியிருப்பச் செயல்."

என்னுங் கடமையைக் கடைபோகக்கழித்தீர். இவனும்,

"மகன்தந்தைக்காற்றுமுதவி இவன்தந்தை
என்னோற்றான் கொலென்னுஞ்சொல்."

என்பதற்கு எடுத்துக் காட்டாய் ஆயுள்வேத சாகரத்தை ஆழங்கண்ட அரிய புலவனாயினன்" என்று சொல்லி மனமகிழ்ந்தார்கள். அரசனும் பிரமாநந்தங்கொண்டவனாகி "இனி இவனுக்கு ஆயுள்வேதபாஸ்கரன் எனப் பட்டஞ்சூட்டுங்கோள்" என்று சொன்னன்.

அப்போது அந்தகன் ஒருவன் அங்குற்று, "ஓ மன்னவர் பிரானே! மந்திரிமார்களே! ஜீவக குமாரன் எனக்குக் கண்தெரியப் படுத்தினாலன்றோ அவனுக்கு ஆயுள்வேதபாஸ்கரன் என்னும் பட்டந்தக்கதாகும்? இல்லாவிட்டால் நீங்கள் அவன்மீதுள்ள அன்பினால் அப்பட்டங் கட்டினீர் என்னுங் குறைமொழிக்கூறக் காரணமுண்டாகுமே" என்று கூறினான். கூறக் கேட்ட ஜீவகன், "என்ன ஐயா, நான் உன்னை முன் பின் ஒருபோதும் அறியாதிருக்க உன்னுடைய குறையைத் தீர்க்கவில்லை என்று சொல்கின்றாயே" என்று கேட்க, அவ்வந்தகன், "ஐயா! முன்னே ஒரு பார்ப்பானுக்கு ஒரு வைத்தியஞ் சொன்னீர்களே, அப்படியே செய்தேன். இன்னும் கண் தெரியவில்லையே" என்று சொன்னான். ஜீவகனும் கண்ணோ யென்பதெல்லாம் ஒன்றுதானா? அவற்றுக்கெல்லாம் மருந்தும் ஒன்றுதானோ? கண்ணோயில் எத்தனை விதமான பேதங்களிருக்கின்றன? அதனை இன்னின்னதென வறிந்து அதனதற்குத் தக்கபடி சிகிச்சை செய்யவேண்டாமா? உன் கண்ணின் நோய் ஒன்று, அந்தப் பிராமணன் கண்ணின் நோய் வேறொன்று. ஆகவே உனக்கு வேறுவகைப்பட்ட சிகிச்சை செய்தல்வேண்டும்" எனக் கூறி, அவனுக்கு அங்ஙனஞ் செய்தான். அவனும் நோய்தீர்ந்து "இந்தப் புண்ணியவானுக்கே தகும் 'ஆயுள்வேத பாஸ்கரன்' என்கின்ற பட்டம். இனித்தடையில்லை. உடனே கட்டுங்கோள்" என்றான். உடனே ஜீவககுமாரபந்தனை ஓர் யானையின்மீதிருத்தி ஊர்வலம் வரச்செய்து ஆயுள் வேதபாஸ்கரன் என விருதுதிப் பட்டங் கட்டினார்கள். இது நிற்க.

(இன்னும் வரும்)

தி. செல்வகேசவராய முதலியார்.

——:o:——

## நமதுபார்வைக்குவந்த புஸ்தகங்கள்.

———

### மருத்துவ சாஸ்திர சங்கிரகம்.

இந்நூல் முன் கவர்ன்மெண்டு ஜெனரல் ஆஸ்பத்திரி வைத்தியரா யிருந்த கெட்டு-வி. வரதப்பநாயுடு அவர்களால் தெலுங்கில் இயற்றப்பட்டுத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. மாதர்களது கெர்ப்போற்பத்திக் காலந்தொட்டுப் பிரஸவமாகும்வரை மாதர்களிடத்துக் காணப்படும் குணங்களை விவரித்து அப்போதைக்கப்போது செய்யவேண்டிய பரிகாரங்களைக் கூறுவதல்லாமல், ருது சம்பந்தமான பலவியாதிகள் அவற்றின் குணங்கள் சிகிச்சை முதலியவைகளையும், பிறந்த குழந்தை பாலப்பருவம் நீங்குமட்டும் சுகமாயிருக்குங் காலத்திலும் வியாதிக்காலத்திலும் பரிபாலிக்கும் முறைமைகளையும் பற்றி மிகவும் எளிதான நடையில் கூறுகின்றது.

தமிழ் மொழிபெயர்ப்புடன் பதிக்கப்பட்டிருக்கும் கான்குவெஸ்டுமருத்துவம் (Conquest's Midwifery) தமிழில் எழுதப்பட்டிருக்கும் ஜகந்நாத நாயுடு அவர்களுடைய 'ஸ்திரீ வைத்திய போதினி' என்னும் இரண்டு நூல்கள் இந்நூலுக்கு முந்தியவை. இப்போது ஜகநாத நாயகலு நாயுடு அவர்களால் மேஸ்தர் பால்கனர் (Mr. Falconer) இயற்றியிருக்கும் ஆங்கிலேய மருத்துவநூல் தமிழாக்கப்பட்டிருக்கிறது. (இது டப்பிரின் பண்டு கமிட்டியாரின் கோரிக்கையினால் டாக்டர் ப்ரான்பூட் அவர்கள் மூலமாக ஷை ஜகநாதநாயுடு அவர்களைக்கொண்டு மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இன்னும் அச்சேறவில்லை.) மருத்துவத்தைப் பற்றி ஆங்கிலேய வைத்திய சாஸ்திரத்தை யனுசரித்துச் செய்யப்பட்ட வேறு தமிழ் நூல்கள் நாமறியாதவைக ளிருக்கலாம்.

'கான்குவெஸ்டு மருத்தும்' கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப்பட்டு ஆதரவு செய்யப்பெற்றது. ஸ்திரீ வைத்திய போதினி செய்தவர் டாக்டர் பார்ரிஸ்ட்கஸ், மொய்தீன் ஷெரிப் என்பவர்கள் போல நமது சுதேச வைத்தியத்தினும் பழகி, சுதேச வைத்திய சாஸ்திரங்களில் உபயோகமானவைகளைக் கைக்கொண்டு, தமது நூலையியற்றி யிருக்கிறார். [இங்கிலீஷ் வைத்திய சாரசங்கிரகம், பதார்த்தகுண ரத்னாகரம் முதலிய இங்கிலீஷ் சாஸ்திரத்தை அநுசரித்துச் செய்யப்பட்டிருக்கும், பல தமிழ் வைத்திய நூல்களுக்கு ஆசிரியர் இவரே.] இன்றியமையாத சில இங்கிலீஷ் மருந்துகளுடன் பல சுதேச மருந்துகள் ஸ்திரீ வைத்திய போதினியில் எடுத்தாளப்பட்ட மருந்துகள். இதனால், சகல இங்கிலீஷ் மருந்துகளும் கிடைக்கும் பட்டணவாசிகளே யன்றிக் கிராமவாசிகளும் சில இங்கிலீஷ் மருந்துகள் மாத்திரம் வாங்கி வைத்துக் கொண்டார்களானால், அந்நூலிற் கூறியபடி வைத்தியஞ் செய்வது சுலபமாக விருக்கும்.

வரதப்ப நாயுடு அவர்கள் மருத்துவநூல் மருத்துவ விஷயத்தை விவரிப்பதில் ஸ்திரீ வைத்திய போதினியிலும் மிகவும்விரிவானது; பிற்பட்ட நூலாதலின். இது நூதனமாகக் கண்டுபிடிக்கப்பட்ட வைத்திய முறைகளைத் தழுவியது. நூலாரம்பம் முதல் முடிவுவரை நாம் கவனமாகப் பார்வை யிட்டதில், முக்கியமான விஷயங்கள் யாதொன்றுங் கூறாது விடப்பட்டதாகக் காணப்படவில்லை. கூறும்மருந்துகளும் முறைகளும் அவ்வவ் வியாதிக்கு ஏற்றவைகளாகவும் சிறந்தவைக ளாகவும் இருக்கின்றன.

ஆனால் வரும் வியாதிகளை எதிர் பார்த்துப் பின் வேண்டியிருக்கும் மருந்துகளை முன்னாகவே வாங்கி வைக்க யாவராயினும் உத்தேசிப்பார்களானால், அவர்கள் உத்தேசம் நிறைவேறுவது கஷ்டமென்பது,

நூலிற்குறித்த மருந்துகளைத் திரட்டி எழுதினால் உடனே தெளிவாகும். ஆகவே இந்நூல் முக்கியமாகப் பட்டணவாசிகளுக்கே யுபயோகமானது. நாட்டுப் புறத்தாரும், நகரவாசிகளைப்போலவே, இதில் ஆங்காங்குக் கூறப்பட்டிருக்கும் சுகாதார விதிகளையும், வியாதி வராமல் தடுக்கும் முறைகளையும் கைக்கொண்டு பயன்பெறலாம்.

வைத்தியரன்றி மற்றவர்களால் செய்யச் சாத்தியப் படாதமுறைகளும் சில சொல்லப்பட்டிருக்கின்றன. உதாரணமாக 29-வது பக்கத்தில் கருப்பை இடம் மாறுதலினால் ஒதுங்கிப் போதலுக்குச் சொல்லுஞ் சிகிச்சையில் "கருப்பை பின்னுக்கு ஒதுங்கி யிருந்தால் . . . கருப்பையை யதாஸ்தானத்தில் தள்ளி வைக்கவேண்டியது" என்றும், 31-ம் பக்கத்தில் "இந்தச்சிகிச்சையால் கூட ரத்தம்நிற்காதபக்ஷத்தில் கருப்பையில் பிண்டசேஷம் கொஞ்சம்நின்றிருக்கும். அந்த மிகுதி பிண்டத்தைக் கையாலாவது ஆயுதங்களாலாவது வெளிப்படுத்தி விடவேண்டியது" என்றும் கூறியிருப்பதைப் பார்க்க. இப்பிரயோகங்களை வைத்தியர்களைக்கொண்டு செய்விக்க வேண்டு மென்பதுஞ் சொல்லப்பட வில்லை. சாதாரணமாக எல்லாரும் வாசிப்பதற்குபயோகமாகும்படி சுயபாஷையில் எழுதப்பட்ட புத்தகத்தில் இப்படிச் சொல்லாமல் விட்டது ஒரு பெருந்தவறு.

மருந்தின் அளவுகூறும் அனேக இடங்களில் ஒரு குன்றிமணி ஒரு 'கிரெயி' (Grain) னுக்குச் சமமென்று சொல்லப்பட்டிருக்கிறது. எமது ஞாபகத்தில், ஒரு குன்றிமணி உத்தேசமாக இரண்டு கிரெயினுக்குச் சமமென்று தோன்றுகிறது. மார்பியா (Morphia) முதலிய சில நஞ்சு மருந்துகளும் இந்நூலிற் கூறப்படுவதனால், ஒரு குன்றிமணியெடை ஒரு 'கிரெயின்' எடையும் சமமாவென்பதை நிறுத்துப்பார்த்த பின்பே அம்மருந்துகளை உபயோகித்தல் வேண்டும்.

மருந்தின் அளவு சில இடங்களில் கூறப்பட வில்லை. (8-ம் பக்கம் திட்டுக்கால வலியின் சிகிச்சையைப் பார்க்க.) சில இடத்தில் மருந்து சேர்க்கும் முறை செவ்வையாகக் கூறவில்லை. (28-ம் பக்கத்தில் நிர்மல மான தண்ணீரில் வெள்ளியுப்பு கலக்க வேண்டு மென்று சொல்லி யிருப்பதில், நிர்மல மானதண்ணீர், நீர் ஆவியாகித் திரும்ப நீராகிய ஆவிநீர் (Distilled water) என்று அர்த்தமாவது கஷ்டம். மற்ற நீரில் வெள்ளியுப்புக் கலந்தால் அதன் குணமாறிப் போகுமென்பது ரஸாயன சாஸ்திரமறிந்த யாவருக்குந்தெயும்.) குழந்தைகளின் வைத்தியங்கூறு மிடங்களில் பலவயதுக் குழந்தைகளுக்கும் மருந்துகளின் அளவு இவ்வளவு இவ்வளவென்று சில சந்தர்ப்பங்களிற் கூறப்பட்டிருக்கிறதே யன்றி, கூறவேண்டு மிடங்களி லெல்லாங் கூறப்படவில்லை. பல இடங்களில் பல நிறையையுடையவைகளாகப் பலநிறைகள் வழங்கப் படுகின்றன. சென்னபட்டினத்துப் பலம் மூன்று ரூபா எடையும், திருநெல்வேலிப்பலம் உத்தேசமாக ஐந்தரை ரூபாயெடையும் உள்ளவைகள். அப்படி யிருக்க, சிலமருந்துகள் இத்தனைபலம் கொடுக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டிருக்கின்றன. அப்பலம் ஒவ்வொன்றும் இத்தனை ரூபா எடையுள்ளதென்று கூறப்படவில்லை.

59-வது பக்கத்தில் கூறிய கார்பாலிக் லோஷனுக்கு எவ்வளவு கார்பாலிக் அஸிட்டும் எவ்வளவுநீரும் சேர்க்கவேண்டு மென்பது தெரியவில்லை.

56, 57-வது பக்கங்களில் "பால்ஜ்வரம்" (Milk fever?) என்னும் வியாதியைப்பற்றிய குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அதன் பரிகாரம் கூறப்பட வில்லை. சில இடங்களில் அர்த்தமாகாத வாக்கியங்கள் (47-வது பக்கத்தில் வரும் "ரத்தப்பிர வாகத்தினால் கர்ப்பஸ்திரீகள் மூன்றுபங்கு இறந்து போவார்கள்" என்ற வாக்கியம் போன்றவைகள்) காணப்படுகின்றன. இவ்வகையான பிழைகள் இந்நூலைத் தமிழில் மொழி பெயர்த்தவருடையவைகளாக விருக்கலாம்.

மேற்கூறிய குறைபாடுகளொழிய இந்நூல் மிகவும் சிரமமெடுத்து அனுபவமுதிர்ந்த ஆங்கிலேய வைத்தியத்தியத் தேர்ச்சியோடு சர்வ ஜனோபகாரமாக வேண்டுமென்னும் நோக்கத்துடன் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் இந்நூலிற்கூறும் சில மருந்துகள் அவற்றின் அளவு சொற்பமாக அதிகப்பட்டாலும் அபாயம் விளைப்பவை யாதலாலும், சில ரண வைத்திய முறைகள், தக்க வைத்தியப்பயிற்சி யில்லாதவர்கள் செய்யத்தகாதவைக ளாதலாலும் இந்நூல் முக்கியமாக இங்கிலீஷ் மருத்துவம் இன்ன இன்ன சிறப்புடையது என்று ஜனங்கள் அறிந்து அனுசரிக்கும்படி செய்யப்பட்ட தென்பதையும், தாங்களே (இந்நூலில் கூறும்) சகல வைத்தியமும் செய்துகொள்ளக் கூடா தென்பதையும், ஞாபகத்தில் வைத்து இந்நூலை உபயோகித்தல் வேண்டும்.

---

மஹாராணி.—சுதேசபெண் கல்விச்சாலைகளிலும் குடும்பங்களிலும் வாசிப்பதற்கு உபயோகமாகும்படி பிரசுரம் செய்யப்பட்டுவரும் மஹாராணி யென்னும் பத்திரிகையின் 5-வது புஸ்தகம் நேர்த்தியாகக் கட்டப்பட்டது ஒன்றும், பொங்கல் பண்டிகை, புதுவருஷப்பண்டிகை, தீபாவளிப்பண்டிகை, கார்த்திகைப் பண்டிகை முதலிய சந்தோஷகாலங்களில் நம்மவர்கள் இஷ்டமித்திர பந்து ஜனங்களோடு அளவளாவி சோபனஞ் சொல்லிக்கொள்ளவும், வாழ்த்துகள் கூறவும் உபயோகமாகும்படி நேர்த்தியாக வர்ணம் தீர்த்து பளபளப்பான புஷ்பங்கள், செடிசெடிகள்,

பக்ஷிகள், பல்லக்கு, வண்டிகள் முதலிய காலவிசேஷத்திற்குத் தக்க கருத்துக்கள் பல சித்திரித்த அழகான சீட்டுக்கள் பலவும் நமது பார்வைக்கு வரப்பெற்றிருக்கிறோம். கண்ணுக்கழகாய்ச் சிறுவர் மனதைக்கவர்ந்து களிப்பை யுண்டுபண்ணத்தக்க இந்நேர்த்தியான சீட்டுக்களையும் மேற்கண்ட புஸ்தகத்தையும் நமக்கு அனுப்பிய ராய் பஹதூர் வன்பாக்கம் கிஷ்ணமாசாரியார் அவர்களுக்கு நாம் மிக்க வந்தனமுள்ளவரா யிருப்பதைத் தெரிவிக்கிறோம். மஹாராணி யென்னும் பத்திரிகை இரண்டுமாசத்துக்கொருமுறை பிரசுரிக்கப்பட்டு வருவதாகக்கூறப்படுகிறது. ஆனால் தகுந்தஆதரவின்மையாலோவேறு யாது காரணத்தாலோ இந்த காலக்கிரமப்படி ஒழுங்காய்ப்பிரசுரிக்கப்பட்டு வருவதில்லைபோல் தோன்றுகிறது. நமது முன்னுள்ள புஸ்தகம் 1891-௵ ஜூன் ௴ முதல் 1892௵ எப்பிரல்௴ வரையுள்ள ஒரு வருஷத்துச் சஞ்சிகைகள் 6-ம்சேர்த்து ஒன்றாகக் கட்டப்பட்டதாயிருக்கிறது. அதில் முதலாவது பாகம் இரட்டைச்சஞ்சிகைகள்(ஜூன்-ஆகஸ்டுமாசத்தியவை) சேர்த்து வெளியிடப்பட்டதாகத்தெரிகிறது. இரண்டாவது பாகமும் அப்படியே 3, 4. சஞ்சிகைகள் (அக்டோபர்-டிசெம்பர்மாசத்தியவை)இரண்டும் சேர்த்து ஒன்றாகப் பிரசுரிக்கப்பட்டதாக விருக்கக் காண்கிறோம். பிப்ரவரிமாசத்து 5-வது சஞ்சிகையும் ஏப்ரல் மாசத்து 6-வது சஞ்சிகையும் தனித்தனி வெளியிடப் பட்டவையாகத் தோன்றுகின்றன. இப்பத்திரிகை சரியாக வெளியாய்வருகிறதா என்பதைப் பற்றி அநேகர் நம்மை இதற்கு முன் விசாரித்திருப்பதால் இது விவரங்களை நம்முன்னுள்ள புஸ்தகத்தில் காணப்படும் அடையாளங்களைக்கொண்டு இங்கு விவரிக்கலாயிற்று. இந்த மஹாராணி யென்னும் பத்திரிகை இவ்விவேகசிந்தாமணியின் பக்கங்களைப்போல் சஞ்சிகைக்கு 24-பக்கங்கள் கொண்டதாகப் பிரசுரிக்கப்பட்டு வருகிறது. இதற்குவருஷசந்தாதபாற்கூலியின்றி ரூபா-2. நமது முன்னுள்ள இப்பத்திரிகையின் 5-வது புஸ்தகம் 148--ப்பக்கங்களையுடையதாய்ப் பல பளபளப்பான வர்ணபடங்கள் அமைந்துள்ளது. அப்படங்களுள் அநேகம் பல சித்திரங்கள் உள்ளவைகள். அவற்றுள் பறவைகள், நீர் வாழ்வன, ஊர்வன, பூச்சிபுழுக்கள் இவை அமைந்த படங்கள் கண்ணுக்கினிமையாக இருப்பதன்றி அச்செந்துக்களைப்பற்றிக் கூறப்பட்டிருக்கும் சாஸ்திர விஷயங்களை நன்கு விளக்குவதற்கு மிகவும்உபயோகமாகவிருக்கின்றன. பல நீதிக்கதைகளும், சாஸ்திர உண்மைகளும் சிறுவர்க்குரஞ்சிதமான விநோதவிஷயங்களும் நன்றாகஎழுதப்பட்டிருக்கின்றன. நம்முன்னிருப்பதுபோல் ஒன்றாகக்கட்டடம் செய்த ஒருவருஷத்துச் சஞ்சிகைகளடங்கிய புஸ்தகத்தின் விலை ரூபா 2—8—0, சிறுவர் சிறுமிகளுக்கு வெகுமானம் கொடுக்க இப்புஸ்தகம் வெகு நேர்த்தியாக அமைந்துள்ளது.

சோபனச்சீட்டுகள்.— நமது பண்டிகைகாலங்களில் ஒருவருக்கொருவர் அளவளாவிச் சந்தோஷங் கூறிக்கொள்ளவும், சோபனஞ் சொல்லி வாழ்த்துகள் கூறவும் ஏற்றவையாகப் பலவர்ணந் தீட்டிய சித்திரப்படங்க ளமைந்த சீட்டுக்களில் தமிழிலும் தெலுங்கிலும் சுபகாலத்துக்கேற்ற சுபசோபனவார்த்தைகளும் வாழ்த்து வாக்கியங்களும் வரையப்பட்டிருக்கின்றன. அவற்றில் சிலவற்றை இப்பத்திரிகையை வாசிப்போர்க்கு விளங்க இங்கு எடுத்துரைப்போம். ஒரு மரத்தின் கிளையில் அழகான பஞ்சவர்ணக்கிளி யுட்கார்ந் திருப்பதுபோல் நேர்த்தியாகச் சித்திரம் தீட்டப்பட்ட ஒரு சீட்டில் "பலவர்ணக் கிளிகள்போல், பலருங் குலாவும் சுபதினத்தில், நலமிகு சீர் மங்களங்கள், நற்கீதங்கள் பாடுவீரே!" என்னும் சுப சோபனப்பாட்டு வரையப்பட்டிருக்கிறது. புதுவருஷப் பண்டிகைக் குபயோகிக்க இசைத்த இன்னொரு சீட்டில் "புதுவருஷப் பண்டிகை பொருந்தி இனிதோங்குக," என்னும் சுபவாழ்த்துக் கூறப்பட்டிருக்கிறது. பொங்கல்பண்டிகையி லுபயோகிப்பதற்கான இன்னொருசீட்டில் "தைப்பொங்கல்பண்டிகை தழைத்தினிதோங்குக." என்னும் சுபவாக்கியம் வரையப்பட்டிருக்கிறது. சரஸ்வதிப் படமெழுதிய இன்னொருசீட்டில் "பூமகள்கடாக்ஷம் பொருந்துமிந்நாளே க்ஷேமமும் போகமும் செழிக்குமிந்நாளே." என்னும் மங்களவாக்கியம் வரையப்பட்டிருக்கிறது. கலியாண காலங்களில் சிறுபெண்கள் பிள்ளைகளுக்குச் சோபனஞ்சொல்லித் தூரத்திலுள்ள பந்துக்கள் தங்கள்ஞாபகசின்னமாக அளிக்க, கலியாணப்பல்லக்கு ஊர்க்கோலம் வருகிறமாதிரியாகச் சித்தரிக்கப்பட்டுப் பின்வரும் சுபவாழ்த்துக்கள் கூறப்பட்டிருக்கும் சீட்டுமிகவும்ஏற்றதாகவிருக்கும்: "ஆல்போல்தழைத்து அறுகுபோல் வேரோடி, மூங்கில்போல் நித்தம் முகியாமல் வாழ்ந்திருப்பீர்." இத்தோடு அச்சீட்டின் கீழ்ப்பக்கத்தில் "சுபம். சுபம். பதினாறும் பெற்று பெருவாழ்வும் வாழ்க." என்னும் சுபவாழ்த்து வரையப்பட்டிருக்கிறது. இச்சீட்டுகள் வேண்டியவர்கள் மஹாராணி பத்திராதிபர் ம-ா-ா-ஸ்ரீ வன்பாக்கம் கிஷ்ணமாசாரியர் அவர்களிடம் ரூபாய்க்கு 16-சீட்டுக்கள் விகிதம் பெற்றுக் கொள்ளலாம்.

---

## தண்ணீர் சொல்லிய தன்வரலாறு.

சிறுவர்க்கென்று சிலகதை குட்டியண்ணாவும் மற்றவர்களும் எழுதிவருகின்றனர். விவேகசிந்தாமணியின் 'சிறுவர் பக்கம்' போக, மற்றப்பக்கங்களில் வய

திலும் அறிவிலும் முதிர்ந்தோருக்கு உபயோகமாக பற்பலர் பற்பல சங்கதிகளை எழுதிவருகிறார்கள். ஆனால், சிறுவர்க்கும் பெரியவர்களுக்கும் நடுவிலுள்ள பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு உபயோகமாக ஒருவரும் எழுதவில்லை. அவர்களுக்கு நான் என் அனுபவத்தில் கண்ட சில சம்பவங்களைச் சொல்லுகிறேன். கவனமாய்க் கேளுங்கள்.

சிநேகிதர்களே! நான் சிலநாட்களுக்கு முன் என்னூருக்கு அருகிலுள்ள மற்றொரு ஊருக்குப்போய்த் திரும்பி வரும்போது புகைவண்டியிற் பிரயாணம் செய்வதற்காக ரெயில் ஸ்டேஷனுக்குப் போனேன். அங்கு ‘டிக்ககட்டு’ வாங்கி அரைமணி நேரம்வரையில் புகைவண்டி வரவில்லை. ஆதலால் அந்த ‘ஸ்டேஷனில்’ அங்குமிங்கும் உலாவிக்கொண்டிருந்தேன். அப்போது ஸ்டேஷன் ஓரத்தில் யானைத் துதிக்கையைப்போல் ஒன்று என் கண்ணுக்குத் தோன்றியது. அது என்னவென்று கண்டறியும்படி அதன் சமீபத்தில் சென்றேன். சிலவிடங்களில் வைத்திருக்கும் தபால் பெட்டியைப் போன்ற உயரமான உருக்குத் தூணிலிருந்து அந்தத் தோல்துதிக்கை தொங்கிக்கொண்டிருந்தது. அந்தத் துதிக்கை நுனியிலிருந்து சொட்டுச் சொட்டாய்த் தண்ணீர் வடிந்துகொண்டிருந்தது. அந்தத் தண்ணீர் எங்கிருந்து வருகிறதென்று சோதித்துப் பார்க்கையில் முன் உறுக்குத் தூணாய்த் தோற்றியது, தண்ணீர் நிறைந்த உயர்ந்த தொட்டியென்றும், அதிலிருந்து தோல்துதிக்கையின் வழியாய்த் தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்ததென்றும் அறிந்தேன். அப்போது யாரோ ஒருவர் சில வார்த்தைகளை முறுமுறுத்துக்கொண்டிருந்ததாக எனக்குத் தோன்றிற்று. அப்படி முறுமுறுத்தது யாரென்று என்னைச் சுற்றித் திரும்பிப் பார்த்தும் ஒருவரையும் சமீபத்திற் காணேன். என்றாலும் என் செவியில் முறுமுறுப்பு வரவர அதிகமாகவே கேட்டது. சிறைச்சாலையில் அடைபட்ட ஒருவன் உள்ளிருந்து தன் அவஸ்தைகளைப்பற்றி முறுமுறுத்துக்கொண்டிருப்பதுபோலத் தோன்றிற்று. நன்றாய் நிதானித்துக் கேட்கையில், அது உருக்குத்தொட்டியில் அடைபட்டிருந்த தண்ணீரின் முறுமுறுப்பு என்று திட்டமாய்த் தெரியவந்தது. அது என்ன சொல்லிற்றென்றால்:—

“இதென்ன வாழ்வு! என்னாளும், என் ஆயுள் முழுவதும் இத்தொட்டியில் அடைபட்டிருப்பதில் என்ன சுகம்? சும்மா இருத்தல் சுகம் சுகம் எனச் சுருதியெல்லாம் சொல்லுகின்றனவாம்!! அதென்ன சுகம்? இடுக்கமான இருட்டறையில் என்னை அடைத்துவைத்திருக்கின்றனர். நான் சர்க்காருக்கு விரோதமாக ஒரு குற்றமும் செய்யவில்லையே. ஐயோ! என்னை இந்தச் சிறையிலிருந்து விடுவிப்பார்களானால் நான் என் மனம்போன போக்கில் போவேன். அப்போது என்னை வாய்க்கால் என்பார்கள். செழிப்பான வயல்களுக்கு மத்தியில் எவ்வளவோ சந்தோஷமாய்ச் சாடி ஓடி இசைபாடி சிநேகிதருடன் கூடி விளையாடிக்கொண்டிருப்பேன். அருகிலுள்ள செடிகளின் புஷ்பங்கள் குனிந்து என்னை அன்புடன் முத்தமிடும். பக்ஷிகள் சந்தோஷத்துடன் காலைமாலைகளில் கக்ஷியாய் என்னிடத்தில் வந்து தம் சிறகுகளை அடித்துத் தலையை அமுக்கிக் குளித்துச் செல்லும். மேலும் உல்லாசமாய் என்மேல் துள்ளித் துள்ளிவிழும் மீன்களுடன் சல்லாபமாயிருந்தாலுமே என் பொழுது சந்தோஷமாய்க் கழியுமே! இதெல்லாம் விட்டு ஒன்றுக்கும் உதவாமல், ஒருவேலையும் செய்யாமல் பன்றிபோல் தின்று சோம்பலாயிருக்கும் சில மனிதரைப்போல் இந்த சிற்றறையில் அடைபட்டிருப்பதில் என்னபயன்? யாரையேனும் பார்க்க முடியுமா? என்னுடன் யாரோனும் சம்பாஷிக்க முடியுமா? என்னை ஓர் உபயோகமில்லாத வஸ்துவென்று உலகத்தோர் நினைத்திருப்பார்களே. என் உபயோகத்தை அவர்களுக்குக் காட்ட ஒரு வழியும் காணேனே. இதுவும் அன்றே அயன் என் தலையில் எழுதிய விதியோ!!” என்று தன்னையும் தன்னைப்படைத்த கடவுளையும் நொந்துகொண்டிருந்தது.

“இதென்ன விபரீதம்! ஐயோ! இந்தத் தண்ணீர் இவ்வளவு அவஸ்தைப் படுகிறதே; இதைச் சிறையினின்றும் விடுவிக்கும் இரக்கசித்தமுள்ளவர் ஒருவருமில்லையா” என நான் நினைத்துக்கொண்டிருக்கையில் “இதோ வந்தேன் வந்தேன்” என்று புகைவண்டி ஊதும் சத்தத்தால் தன் வரவைத் தெரிவித்துக்கொண்டே ஓடிவந்து எனக்கு சமீபமாக நின்றது. நின்றதும் அவ்வண்டியிலிருந்து கரித்துணி போர்த்திருந்த ஒரு நாட்டுத்துரை கீழே குதித்து, அந்தத் தொட்டியிலிருந்து ஒரு குமிழ் ஆணியைத் திருப்பிவிட்டுத் தண்ணிரைப்பார்த்து “இங்கே விரைந்து வா. உனக்குக் கொஞ்சம் வேலை யிருக்கிறது: சீக்கிரம்!” என்று உத்திரவு செய்வதுபோல் அண்ணார்ந்து பார்த்தார். உடனே தண்ணீர் “தங்கள் சித்தம், என் பாக்கியம்” என்று முதலில் அவர் பாதத்தில் விழுந்து நமஸ்காரம் செய்து, பின் கடகடவென்று பாய்ந்து நீராவி யந்திரத்திலுள்ள ஒரு தொட்டியினுள் சென்று நின்றது. அந்தத் தொட்டிக்கு அடியில் செங்கல் சூளையில் தீ எரிவதுபோல நிலக்கரி சுவாலித்து எரிந்துகொண்டிருந்தது. அரை நிமிஷத்தில் அந்தத் தொட்டித் தண்ணீரில் கொதிப்பு உண்டாயிற்று. அப்போது அந்தத் தண்ணீர் பட்டபாட்டை என்னெ

ன்று சொல்வேன்! அதை நினைக்க நினைக்க அதிகப் பரிதாபமாயிருக்கிறது. அப்போது அது சொன்னதாவது: "இதென்ன? என்னை இப்படி வருத்துகின்றனர். இரக்கமில்லா மனிதர் என்னைத் திறக்க மனங் கொள்ளாமல் இருக்கின்றனர். அவர் இறக்கக்கடவர்! ஐயோ, இதுவரை இப்பாடு நான் எப்போதும் பட்டதில்லையே. ஒருநாள் பேதை மடமாதர் சிலர் கூட்டாஞ்சோறு சமைப்பதற்கென்று என்னைப் பானையில் அடைத்துத் தீயினால் சுட்டுக் காய்ச்சினர். அதுவோ என்னைக் கொன்றதுபோலவே இருந்தது. என்றாலும் அவர் அறியாப் பெண்களானதால் பொறுத்திருந்தேன். இதென்ன! அதிலும் பெரிய அவஸ்தையா யிருக்கின்றதே! ஓடிப்போகவென்றால் ஒரு ஊசி நுழைக்கவும் வழியில்லை. அப்பப்பா! இக் கொடியரைப்போல் கல்நெஞ்சரை நான் எங்குங் கண்டதில்லை"—என்று கதறிக் கொந்தளித்து அங்குமிங்கும் முட்டியும் ஒன்றும் முடியாமல் தன் பிராணனைவிட்டு ஆவியைப் போக்கிற்று. பரிதாபம்! பரிதாபம்!

தண்ணீர் போக்கிய இந்த ஆவியோவெனில், தண்ணீரைவிட அதிகப் பாடுபட்டபோதிலும், தனக்கு ஏதோ பலமும் சக்தியுமிருப்பதாய்க் காட்டியது. தண்ணீரைப்போல் அது அழுதுத் தத்தளிக்கவில்லை; ஆனால் சினங்கொண்ட நாகம்போல் சீத் சீத் என்று சீறிக் கோபத்துடன், 'என்னை இப்போதுவிடுவிக்கின்றீர்களா, இல்லையா? நான் தண்ணீரைப் போல் வெகுநேரத்துக்குப் பொறுமையுடன் இருக்கமாட்டேன்: அதைவிட நான் பலசாலி; என்கோபத்தைத் தணிக்க எவராலும் கூடாது. என்னை வெளியே போகவிடத் தாமதிப்பீர்களாகில், இந்த அறையின் ஆமைப் பூட்டுகளை அரைநொடியில் அதமாக்கி வெளியே போய்விடுவேன்' என்று பயமுறுத்திற்று.

உடனே என் காது செவிடுபடும்படி கீச்சு சப்தமாய்க் கூச்சல் கேட்டது. நீராவியின் கோபத்தால் உண்டான சத்தமென்று நினைத்தேன். ஆனால் அது சந்தோஷத்தின் மிகுதியால் உண்டானதென்று அப்பால் தெரிந்தது. எப்படியென்றால் நான் முன் சொன்ன துரை இஞ்சின் வண்டியிலிருந்த ஒரு திட்டிவாசலைத் திறந்துவிட்டார். அதின் வழியாய் நீராவி "தப்பினேம் தப்பினேம்" என்று சத்தமிட்டு வெளிப்பட்டது. அந்தத் திட்டிவாசல் உடனே மூடிக்கொண்டது. அப்பால் வேறொரு திட்டிவாசல் திறந்தது; அதின் வழியாயும் நீராவி வெகுவிசையாய் வெளிப்பட்டது. அப்படி வெளியேபோகும் ஆவி சும்மா போகாமல் வண்டியின் சக்கரங்களுடன் பொருந்தியிருந்த உருக்குத்தடி யொன்றை விசைகொண்டு தள்ளித் தள்ளிச் சென்றது. உருக்குத்தடி அசையவே, சக்கரங்களும் நகர்ந்தன. வண்டியும் மெதுவாய் நகர்ந்தது. வண்டி நகர்ந்தபின் தாமதிக்கலாகாதென்று நான் ஓடிப்போய்த் திறந்திருந்த ஓர் வண்டியில் பொட்டென ஏறிக்கொண்டேன். அரை நிமிஷத்திற்கெல்லாம் இஞ்சின் வண்டியும் அத்துடன் சேர்ந்த வண்டித்தொடரும் ஸ்டேஷனை விட்டு அப்பால் சென்றது. சற்றுநேரத்தில் அவ்வூரும் எங்கள் கண்ணுக்கெட்டாததூரத்தில் மறைந்து போயிற்று. பக்கத்திலிருந்த மரங்களும் வயல்களும் மாடுகளும் வீடுகளும் எங்களுக்கு எதிர்முகமாய் சிறகுகட்டிப் பறந்தாற்போல் பறந்து காணாமற் போயின.

இது இப்படியாக, 'இஞ்சின்' வண்டியிலிருந்து விடுபட்ட நீராவியானது வழிப்போக்கரிடத்தில் விடைபெற்றுப் போவதுபோல், எங்கள் வண்டிகளின் ஜன்னல்கள் வழியே எட்டிப்பார்த்துப் பார்த்துப் பின்னடைந்தது. அப்போது ஓர் மூலையில் 'விவேகசிந்தாமணி'யென்னும் மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகையை வைத்து வாசித்துக்கொண்டிருந்த ஓர் வியாபாரி அந்த நீராவிக் கூட்டத்தைப் பார்த்து, "உங்களுக்கு நான் மெத்த நன்றியறிதல் உள்ளவனாயிருக்கிறேன். நான் முன் ஒருவாரத்தில் செய்யக்கூடிய பிரயாணத்தை இப்போது அரைநாளில் முடிப்பது உங்கள் உதவியாலன்றோ!" என்று சொன்னார்.

ஒரு வருஷம் தன் பெற்றோர் முதலியவரையும் பாராமல், சென்னையிலிருக்கும் ஓர் கல்விச்சாலையில் படித்திருந்து நடுவேனில் விடுமுறையில் தன்னூருக்குப் போய்க்கொண்டிருந்த ஓர் சிறுவன் "நீராவிக் கூட்டங்களே! உங்களுக்கு நான் வந்தனம் தந்தேன். இன்று சாயந்தரமே என் பெற்றோர் சினேகிதர் முதலிய எல்லாரையும் பார்க்க என்னூர்க்கு என்னைப் போகச்செய்வீர்களல்லவா!" என்றான்.

உடம்பு மெலிந்து முகம் வெளுத்து இரத்தம் கெட்டு வியாதிப்பட்டு உட்கார முடியாமல் தலையணைமேல் சாய்ந்துகொண்டிருந்த நோயாளி ஒருவன் "என்னை இவ்வளவு சீக்கிரமாய் என் வீட்டிற் கொண்டுவந்து சேர்த்தீர்களே. நீராவித்திரள்களே! உங்களுக்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்யப் போகிறேன்!" என்று புகழ்ந்து பேசினான்.

இப்புகழ்ச்சியான வந்தன வார்த்தைகளைக் கேட்டவுடன் நீராவிக்குச் சந்தோஷமுண்டாகி "இப்போது தான் எனக்குத் திருப்தி; நான் உடம்பு எடுத்ததற்கு உலகத்துக்கு உபயோகமாகக் கொஞ்சம் உழைத்தேன்" என்றுசொல்லி ஆனந்தத்தின் மிகுதியால் உயர உயர எழும்பிக் குதித்தது. புகைவண்டித் தொடரோவெனில், பின்னடைந்த நீராவியைப் பற்றிச் எண்ணமேயின்றி வெகுவிரைவாய் ஓடிவிட்டது. நீராவி செய்த உபகாரத்திற்காக அதற்கு பற்

பலர் வந்தனம் கூறிச் சென்றும், அந்நீராவியால் தள்ளுண்ட வண்டியானது சற்று தாமதித்து அதற்கு வந்தனங்கூறிச் செல்லாமலும், அதைப்பற்றிய எண்ணமேயில்லாமலும் ஓடிவிட்டதைப் பார்த்த நீராவிக்கு அதிக விசனமும் கோபமும் உண்டாகி முகங் கருத்து "பளா! நன்றாயிருக்கிறது!! இவ்வுலகத்தில் நடக்குங் காரியங்கள் இப்படியே. எவ்வளவோ பரோபகார சிந்தையுடன் நாம் ஒருவருக்கு உபகாரஞ் செய்தும் அவர் நம்மை மறந்துபோவதாயிருக்கிறது. வெகு நேர்த்தி! என்னையன்றி இப்பெரிய வண்டித் தொடரின் ஓர் அணுவும் அசையுமா? என் உதவியால் அசைந்தோடிய வண்டிக்கு அப்பால் என்னைத் தொட்டென்ன காரியமிருக்கிறது!! . . . . தன்னயம் பாராட்டும் இவ்வுலகத்தில் நானிருப்பதைவிட வேறெங்கேயாவது போய்விடுவது நன்று" என்று சொல்லிக்கொண்டு மேல் லோகத்துக்குப் போய்விட்டது.

இதற்கு சமீபத்தில் என்னூரானதால் நான் அங்கே இறங்கினேன். சிறுசிறு நீராவிக் கூட்டங்கள் சில அங்கே வெகு விசனத்துடன் ஒன்றும் பேசாமல் தங்கியிருந்தன. அவைகளைப் பார்த்து "ஏன் விசனப்படுகிறீர்க" ளென்று கேட்டேன். "பலமுள்ள பெரிய நீராவிக் கூட்டங்களெல்லாம் எங்களை இங்கே விட்டுவிட்டு மேலே போய்விட்டன. எங்களால் உயரமாய்ப் பறக்கமுடியாமல் இங்கே இருக்கிறோம்." என்றன. அப்போது நான் "பெரியநீராவிக் கூட்டங்கள் எங்கே போய்விட்டன?" என்று கேட்டேன். "அதோ மேற்கே பொதியமலையிருக்கிறது, அதின் உச்சியில் எங்கள் வாசஸ்தானம். அங்கேதான் போயிருப்பார்கள். எங்களுக்கு அவ்வளவு உயரமாய்ப் பறக்க சக்தியில்லை. ஆகையால் இங்கே உட்கார்ந்திருக்கிறோம். நாளைப் பொழுதுவிடியும்போது பனியாகவும் மூடுபனியாகவும் இப்பூமியின்மேல் விழுந்து நாங்கள் பிராணனை மாய்க்க எண்ணியிருக்கின்றோம். நாங்கள் இறந்துபோனபோதிலும் எங்கள் சரீரம் பயிர்களுக்கும் புற் பூண்டுகளுக்கும் கொஞ்சம் பிராணாதாரமாயிருக்கும். அப்படி உலகத்துக்கு உபயோகமாகும்படியாய் எங்கள் பிராணனைவிடுவதால் எங்களுக்கு மோக்ஷம் கிடைக்கும்" என்று சொல்லின. இதுகேட்டு அவைகளின் நல்லெண்ணத்துக்கும் பரோபகார சிந்தைக்கும் மெச்சிக்கொண்டு பெரிய நீராவிக் கூட்டங்களைத் தேடிப் போனேன். பொதியமலைச் சாரலில் அவைகள் இறங்கியிருக்கக்கண்டு அவைகளின் சமீபத்திற் சென்றேன். அப்போது ஒரு மேகம் மற்றவைகளைப் பார்த்து "என் மனஸ்தாபத்துடன் இருக்கின்றீர்கள்? உலகத்தின் இயற்கை நமக்குத் தெரியாதா? உலகத்தோர் தன்னயம் பாராட்டியேயிருப்பர்! அதனால் நமக்கென்ன?" என்றது. அதுகேட்ட மற்றொரு மேகம் "செய்நன்றியறியாத மனிதர் இவ்வையகத்தில் மெய்மறந்து திரிகின்றனர். அவர்களுக்கு புத்தியுண்டாகவேண்டி இந்திரனிட்ட கட்டளைப்படி முன் 'மாதமும்மாரி' பொழிந்துவந்ததையொழித்து இப்போது வருஷத்துக்குமூன்றுமழை பெய்கிறோம். இதையும் அவர்கள் அறியவில்லை. செய்நன்றியறியாமலிருப்பது மாத்திரமோ? உண்டசோற்றுக் கிரண்டகஞ்செய்வது முதலாகிய எத்தனையோ தீங்குகள் அயலாருக்குச் செய்து வருகின்றார்கள். இவர்களுக்குக் கடவுளொருவரிருக்கிறார் என்பதை உணர்த்தும்பொருட்டு நாமெல்லாம் இப்போதே ஒன்றுசேர்ந்து இவர்கள்மேல் கல்மழையாய் உடனே இறங்கி இவர்கள் சொந்தம் சொந்தம் என்று பாவித்துவருகிற வீடுகளையும் காடுகளையும் சம்பாத்தியங்களையும், நம்மை அவமதித்துச் சென்ற புகைவண்டியையும் ஒரு நிமிஷநேரத்தில் உடைத்துத் தகர்த்துவிடுவோமா? அல்லது நமது பந்துக்களெல்லாரையும் ஒன்றுசேர்த்து ஒரேமட்டாய்த் தரையிலிறங்கி மறுபடியும் ஜலரூபமெடுத்துப் பிரளயமுண்டாக்கி இத்துன்மார்க்கரின் பயிர்வகைகளை அழுகச்செய்து நாசமாக்கி அதன்மூலமாகப் பஞ்சமுண்டாக்குவோமா?" என்றது.

இது கேட்டிருந்த மற்றொரு மேகம் வெகு கோபங்கொண்டு "இந்தப் பாவிகளின் பாவச்செய்கைகளை நாம் பொறுத்திருக்க இருக்க, இவர்கள் அதிகமாகவே பாவம் செய்கிறார்கள். தற்புகழ்ச்சி, தன்னயம் பாராட்டும் குணம் இவைகள் அதிகமாகவே விர்த்தியாகின்றன. ஆகையால் பனிக்கட்டிக்கு இருப்பிடமான 'ஹிமயமலை' யுச்சியில் நாமெல்லாம் சென்று அங்கே பனிக்கட்டி மலையாய் உறைந்து திடீரென்று அம்மலையிலிருந்து அப்படியே பாறை பாறைகளாக வழுவி விழுந்து ஓரேமட்டாய் விந்தியமலைவரையிலும் மத்தியிலகப்பட்ட மனிதர், ஜந்துக்கள், வீடுகள் முதலிய எல்லாவற்றையும் பூமியோடு பூமியாய் அரைத்து அழித்து, அப்பால் விந்தியமலையிலிருக்கும் நமது பந்துக்களையுஞ் சேர்த்துக்கொண்டு மறுபடியும் நழுவி கன்னியாகுமரிவரையும் முன்போலவே பாழாக்கி விடுவோம். இப்படிச்செய்தால்தான் என் மனம் சாந்தப்படும்" என்றது.

அப்போது மற்றொரு மேகம் "சீ, சீ, இது சரியல்ல; இப்படிச் செய்தால் கெட்டவர்களுடன் நல்லவர்களும் மாண்டுபோவார்கள். கெட்டவர்கள்மட்டும் சில கப்பல்களில் ஏறி வடசமுத்திரத்துக்கு வருவராயின், அங்கிருக்கும் நமதுபாட்டனாருக்குச் சொல்லி சமுத்திரத்தண்ணீரை உறைந்துபோகச் செய்தால் அந்தக் கப்பல்கள் எங்கும் அசைய வழியில்லாமல் அவைகளிலுள்ளஜனங்களெல்லாம் உணவின்றி மாண்டுபோவார்கள்" என்றது.

இது கேட்டிருந்த மற்றொரு மேகம் "இதெல்லாம் என்ன சமாசாரம்? வேடிக்கையாய்ப் பேசி விளையாட்டாய்க் காலம்போக்க எண்ணியிருக்கின்றீர்களோ? நல்லது! நல்லது! உலகத்தோர் தன்னயம் பாராட்டினால் நாமும் அப்படியே யிருக்கவேண்டுமோ? ஒருவன் நமக்குக் கேடு செய்தால், நாமும் அவனுக்குக் கேடுசெய்யவேண்டுமோ? இதென்ன! மதியீனம். நம் எஜமான் நமக்கிட்ட கட்டளையின்படி நாம் 'நிஷ்காம்மிய கர்மம் செய்வோம்'' என்றது. அதற்கு மறுமொழியாக மற்றொரு மேகம்: ''இதென்ன இப்படிச் சொல்லுகிறாய்? நான் தண்ணீராகும்போது இவ்விராஜதானியின் எல்லாப் பாகங்களிலுமுள்ள மனிதர் என்னை ஆகாரமாகப் புசித்துவிடுகிறார்கள். என்னமோ, தங்கள் ஜீவன் பிழைக்கவே அப்படி செய்கிறார்கள். அம்மட்டில் சரிதான். ஆனால், கடப்பை ஜில்லாவுக்கு சமீபத்தில் சில விடங்களில் இம்மனித பூதங்கள் என்னை விழுங்குவதன்றித் தீயினால் சுட்டுக் காய்ச்சுகிறார்கள்,* அப்போது எனக்கு சகிக்கக் கூடவில்லை. அதனால்தான் அவர்களைத் துன்பப்படுத்த வேண்டுமென்று சொன்னேன்'' என்றது. அது கேட்டு முன் பேசிய மேகம் ''நீ சொல்வது சரியல்ல. எப்படியென்றால், எல்லா மனிதரும் உன்னைச் சுடாமல் கடப்பை முதலிய சில இடங்களிலுள்ளவர்கள் மட்டும் உன்னை ஏன் சுடவேண்டும்? யோசித்துப்பார். நீயோ மிகநல்லவன்; ஆனால் சகவாச தோஷத்தால் கெட்டுப் போகிறாய். நீ மட்டும் சுத்தமாயிருந்தால் உன்னைச் சுடுவார்களா! நீ காடுகளிலும் மலைகளிலும் அலைந்து திரியும்போது வியாதிகொண்ட அனேக துன்மார்க்கருடன் சினேகித்து அவர்களுடன் கலந்து செல்லுகிறாய். அதனால்தான் உன்னைச் சுடுகிறார்கள். உன்னைத் துன்பப்படுத்த வேண்டுமென்பது அவர்களுடைய நோக்கமல்ல. ஆனால் உன்னுடன் கூடியிருக்கும் துன்மார்க்கரைக் கொன்று உன்னைச் சுத்தமாக்க வேண்டுமென்பதுவே அவர்களுடைய கருத்து. இதனால் உலகத்திலுள்ள மனிதரெல்லாம் மிகவும் நல்லவர்களென்றும், அவர்கள் செய்கையெல்லாம் நற்செய்கைகளென்றும், நல்லகாரணம் பற்றியே எல்லாச் செய்கைகளும் செய்வார்களென்றும், நான் சொல்லவில்லை. நீ யிப்போது சொல்லிக்கொண்ட முகாந்தரம்; சரியானதல்லவென்றுதான் நான் சொல்ல வந்தேன்'' என்றது.

உடனே யெல்லா மேகங்களும் இப்போது பேசிய மேகத்தைப்பார்த்து ''நீ சொல்வது சரிதான். ஆனால் எங்களை என்ன செய்யச்சொல்லுகிறாய்''? என்று கேட்டன. அந்தமேகம்: ''நான் சொல்வதைக்கேளுங்கள். பலனையிச்சிக்காமலும் பிறர் குற்றம் நாடாமலும் நல்லவர் பொல்லாதவர் என்று பாராமலும், நன்மையேசெய்யவேண்டுமென்பது நமக்கு எஜமான் இட்ட கட்டளை. அப்படியே ஒருகாரியம்செய்வோம். அதோ பாருங்கள். பயிர்வகைகளெல்லாம் தண்ணீரில்லாமல் வாடியிருக்கின்றன. கோடையின் வரட்சியால் கிணறுகளிலும் தகுந்த ஊற்று இல்லாமல், கவலையால் தண்ணீர் இறைப்பதை விட்டு கிருஷிகர் ஏற்றத்தில் சிறுபட்டைகளைக்கட்டி வேர்வைசொட்டப் பகல் முழுவதும் இறைத்தும் ஐந்தாறு பாத்திகளும் இன்னும் நனையவில்லை. புற்பூண்டுகளெல்லாம் தாய் முகங்காணாத பிள்ளைபோல் மழையை யெதிர்பார்த்திருக்கின்றன. பெரிய மரங்களும் வெயிலின் கொடூரத்தால் பட்டுப்போகின்றனவென்றால் புற்பூண்டுகள் உலர்ந்து போவதற்குச் சொல்லவும் வேண்டுமோ? ஆகையால், இவைகளுக்கேதாவது உபகாரம் செய்ய யோசிப்போம்,'' எனறது.

உடனே மேகங்களெல்லாம் ஆகாயத்தில் பரவி தீக்ஷண்ணியமான சூரியகிரணங்களை மறைத்துப்பயிர்களுக்கும் புல்தரைகளுக்கும் குடைபிடித்தது போல் குளிர்ந்த நிழலைக்கொடுத்தன. இதனால் புற்பூண்டுகளும் பயிர்களும் வெகு நன்றியறிதலுடன்மேகங்களை ஏறெடுத்துப் பார்த்து புன்சிரிப்புக்கொண்டன. புஷ்பங்கள் சந்தோஷமாய் மலர்ந்தன. இதைப்பார்த்தவுடன் மேகங்களுக்கு அவைகள் மேல் இரக்கமுண்டாகி மழைத்துளிகளாக மாறி அவைகள்மேல் இறங்கின. சூரியன் தன்கொடுமையைக் காட்டி மேகத்தையும் மழையையும் சிதறச்செய்ய பிரயாசைப்பட்டும் முடியாததால் கோபங்கொண்டு கர்ச்சித்து இடியுண்டாக்கினான். மழையோ அதற்கு அஞ்சவில்லை. நிலங்குளிர மழைபெய்தது. கிருஷிகர் 'இந்த ஈரம் உழப்போதும்' என்றனர். தவளைகள் ஒன்று சேர்ந்து 'குறவை' யிட்டன. நீர்வாத்துக்கள் மழைத்தண்ணீரில் மூழ்கி மூழ்கி விளையாடிக்கொண்டிருந்தன. காக்கைகள் எல்லாம் தங்கள் தங்கள் சிறகுகளை உதறி உலர்த்திக்கொண்டு கா-காவென இங்கும் அங்கும் ஓடித்திரிந்தன; குளங்களிலிருந்து ஓடைகளில் எதிர்த்து ஏறிவரும் சிறுமீன்கள் ஓடைகளில் மழைத்தண்ணீர் குறைந்துபோக நீந்திப்போக முடியாமல் அங்கங்கே நின்றுபோயின; அவைகளைக்காக்கைகள் தம் இனத்தைக் கூவியழைத்து எல்லாம் பங்கிட்டுத் தின்பது வெகுவினோதமாயிருந்தது. மனிதர் புஞ்சைப்பயிர்கள் விதைக்கும் பொருட்டுக் கூட்டங்கூட்டமாய் மாடுகளை யோட்டிக்கொண்டு கலப்பைகளைச் சுமந்து சென்றார்கள். இப்படியாக எங்கேபார்த்தாலும் நிரம்பவும் சந்தோஷமுண்டாயிருந்தது.

பூமியில் விழுந்த மழைத்துளிகளோவெனில்; அனேகம் ஒன்று சேர்ந்து சிறு சிறு ஊற்றுக்களாகி

* இந்தப் பாகங்களில் நல்லதண்ணீர் கிடைப்பதில்லை யாதலால் விஷசுவரத்திற்குத்தப்பத் தண்ணீரை கொதிக்கக்காய்ச்சிக் குடிப்பதுவழக்கம்.

ஓடின. மண்ணின்மேல்உள்ள அழுக்கும்அசங்கியமும் கரைந்து சுத்தமாயிற்று; கல்லினுள் வசிக்கும் தேரைக்கு ஜீவன்வந்தது. சில ஊற்றுக்கள்மண்ணில்ஊரியும் கற்பிளவுகளில் இறங்கியும் கிணறுகளில்ஊற்றுக்கண்களுக்குச் சென்றன. பலஊற்றுக்கள் ஒன்றுசேர்ந்து சிறு ஓடையாயின. இவ்வோடையின் ஓரத்திலிருக்கும் செடி கொடிகள் செழுப்படைந்தன. ஓடையானது சில திரடுகளைச் சுற்றியோடி வருவதை நான் பார்க்கும்போது ஒருவேளை அது மறைந்தும், ஒருவேளை காணப்பட்டும் ஓடிவருவதால் அது 'கண்ணுமூச்சு' விளையாடுவதுபோலிருந்தது. முன் தொட்டியில் அடைபட்டிருந்தபோது தண்ணீர் சொன்னது போல் புஷ்பங்கள் அவ்வோடையை முத்தமிட்டன. பக்ஷிகள் தங்கள் பேடுகளுடன் மறுநாட் காலையில் அவ்வோடைக்குச்சென்று சிறகுகளை யடித்துக்கொண்டு சந்தோஷமாய்க் குளித்தன. ஓடையும் இப்படி உல்லாசமாய் நடந்துவரும்போது, சமீபத்தில் மற்றொரு ஓடைவருவதைக்கண்டு "தற்காலத்து ஜனங்கள் ஒற்றுமையினுலுண்டாகும் பயனை அறியவில்லை: நாம் நம்மினத்துடன் சேர்ந்திருந்தோமானல் நமக்கு அதிக பலம் உண்டாகும்" என்று நினைத்து அதனுடன் சேர்ந்து வாய்க்கால் ஆயிற்று. அதில் அனேக ஜனங்கள் ஸ்நானம்பண்ணி தாகத்துக்குத் தண்ணீர் எடுத்துப்போக சிலர் அதில் துள்ளி விளையாடும் மீன்களை வலை வீசிப் பிடித்துப் போவதையும் பார்த்தேன்.

சற்றுதூரம் இந்தக்கால்வாய் சென்றவுடன் அங்கே ஒரு பள்ளத்தாக்கு இருந்தது. அதில்வாய்க்கால் சென்று நிறைக்க அது குளம் ஆயிற்று. கோடைகாலத்துக்கு தாகத்துக்கு உபயோகிக்கும் இத்தண்ணீரில் அனேக ஜனங்கள் 'கால்கழுவி,' அழுக்கு வஸ்திரங்களைத் துவைத்து ஸ்நானம் பண்ணி அசங்கியப்படுத்திக்கொண்டிருந்தார்கள். அப்போது அந்தத் தண்ணீர் "ஐயோ! நான் சந்தோஷமாகச்சுயேச்சையாய்க் காலங்கழிப்பதைவிட்டு இம்மனிதருக்குக் கோடை காலத்தில் உபயோகப்படும்பொருட்டுஇவ்விடத்தில் அடைபட்டிருப்பதை உணராமல், இவர்கள் இப்படி யென்னை அசங்கியப்படுத்துகிறார்களே! வர வர இவ்விந்துக்கள் தங்கள் 'மனுதர்மசாஸ்திரத்'தையும் மறந்துபோனார்களோ!! நான் ஓடிக்கொண்டிருக்கும் பொழுது ஒருவேளை என்னை அசுத்தப்படுத்தினும் போகிறதென்னலாம். நான் ஓரிடத்தில் நிலையடைந்தபின் என்மேல் துப்புவதும், அழுக்கு வஸ்திரங்களைப்போடுவதும் மெத்தஅநீதியன்றோ? இவர்களுக்கு எப்போது தான் புத்திவருமோ,நாராயணா!!" என்று மிக வருத்தத்துடன் கிலேசப்பட்டுக் கொண்டிருக்கையில், சில பள்ளர் வந்து குளத்தின் மடையைத் திறந்துவிடவே "நன்று, நன்று; பயிர்களுக்கு மத்தியில் சந்தோஷமாய்ப் பாய்ந்து விளையாடலாம்" என்று சொல்லிக்கொண்டு, தண்ணீர் ஓடிற்று;

இப்படி வயல்களுக்கு உடேபோன ஓடை வயல்களில் பாய்ந்தபிற்பாடு, முன் தான் விட்டுப்பிரிந்த வாய்க்கால், அருகில்வர, சம்பத்துடையவர் தம்மினத்தாரில் வறுமையடைந்திருப்பவர்களைக்கண்ணெடுத்தும் பாராமல் தள்ளிவிடுவதுபோலல்லாமல், அது தன்னுடன் சேர்த்துக்கொண்டது. கொஞ்ச நேரத்தில் வாய்க்கால் சற்று தூரம் சென்றவுடன், அங்கு ஓர் அணை கட்டியிருக்கக்கண்டு, அது நூல் நூற்கும் யந்திரத்தின் சக்கரத்தைச் சுற்றுவதற்காகச் செய்திருந்த தந்திரமெனத் தெரிந்து, அந்தச் சக்கரத்தின் மேல்பாய்ந்து தள்ளிச் சுற்றி இயந்திரத்தை ஓட்டுவித்து அனேகமாயிரம் ஜனங்கள் செய்யும் வேலையைத் தானேசெய்துமுடித்து அப்பால் அவ்வழியேசிலநாள் போய்க்கொண்டிருக்கையில் இன்னொரு கால்வாயைக்கண்டது. இரண்டுகால்வாய்களும் சினேமாய்ச் சேர்ந்து நதியாகி, "இப்போது மனிதருக்கேதாவது உபகாரம்செய்யலாமா" வென யோசித்தது. அங்கே நானாவிதமான சரக்குகளை ஒருஊரிலிருந்து மற்றொரு ஊருக்குக்கொண்டு போவதற்காகச் செய்யப்பட்ட பெரிய கப்பல்கள் பாய்விரித்து நிற்பதைப்பார்த்து, அக்கப்பல்களை ச்சுமந்து சென்று திரும்பவும் அவைகள் இருப்பிடம்சேர்த்தபின், அவ்வழியாய்ப் போய்க்கொண்டேயிருந்தது. ஒருநாள்சற்றுகவலையீனமாய்க் கொஞ்ச தூரம்போகவே வழிதெரியாமல் தடுமாறி சமுத்திரத்தில் விழுந்து விட்டது.

ஐயோ! பாவம்! ஜனங்களுக்கு இவ்வளவு பிரயோஜனமாயிருந்த நதியின் கெதியிப்படியாயிற்றே யென்னும் துக்கத்துடன் நான் என் வீட்டுக்கு வந்துசேர்ந்தேன். அதன்பின் சில நாட்கழித்துப் போய்ப்பார்த்தும்,சமுத்திரத்தில்விழுந்தநதி திரும்பக்கரையேறப் பார்க்கவில்லை. ஆனல் அங்குநின்றவர்களில் ஒருவர் "சூரியன் வித்தைசெய்வதில்கெட்டிக்காரன்; அவன் சமுத்திரத்தில் விழுந்த நதியைப் புயல்காற்றுடன் மேகங்களிலேற்றி மலைகளுக்குக் கொண்டுபோகிறான்" என்றார். "அப்படியானல் என்கண்ணுக்குத் தெரியவில்லையே." என்று சொன்னேன். அதற்கு அவர் "நீயுன்வீட்டில் ஒரு பாத்திரம் நிறையத் தண்ணீர் வார்த்து சூரியனுக்கு முன்பாக வைத்திரு; சில நாள் சென்றபின் சூரியன் செய்யும் வித்தை உனக்குத்தெரியும்" என்று சொன்னார். அவர் சொன்னபடியே வைத்தேன். ஒரு வாரத்தில் பாத்திரத்தில் தண்ணீரே இல்லை. அது எப்படி காணுமற் போயிற்றென்றும் எனக்குத் தெரியவில்லை.

சினேகிதர்களே! நீங்கள் சொல்லமாட்டீர்களா?

உங்கள் அன்புள்ள,

முத்தண்ணா.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

எனது சின்னஞ்சிறு நேசர்களே! இந்தவிசை நமது பக்கத்துக்கெழுத நம் தாதாவும், தூட்டியண்ணாவும் முன்வந்திருக்கிறார்கள். அவர்கள் நமக்கு பழைய சிநேகிதர்களாதலால் அவர்கள் எழுதியிருப்பதைப் பற்றி நான் ஒன்றும் உங்களுக்கு சொல்லத் தேவையில்லை. ஆனால் உங்களோடு வேறு விஷயமாக ஒரு வார்த்தைசொல்ல வேண்டியிருக்கிறது. இந்தமாசத்து விவேகசிந்தாமணியில் 'மூத்தண்ணா' என்னும் ஒரு பெரிய தோழர் 'பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு உபயோகமாக' 'தண்ணீர் சொல்லிய தன் வரலாறு' என்று ஒரு விநோதமான சங்கதி யெழுதியிருக்கிறார். அந்தவிஷயம் இந்தப் பக்கத்துக்கு முன்னால் அச்சிடப்பட்டிருக்கிறது பாருங்கள். நான் உங்களை யழைக்கும்போதெல்லாம் 'என் சின்னஞ்சிறு நேசர்களே' என்று அழைப்பதால் நீங்களெல்லாரும் 'சிறுகுஞ்சுகள்' என்று நினைத்து அவர் அதிலடங்கிய சாஸ்திர மர்மங்கள்* உங்களுக்கு அர்த்தமாகாதென்று 'பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு' என்று பிரத்தியேகமாக எடுத்துக்கூறி எழுதியிருக்கிறார். நமக்குள் பள்ளிக்கூடத்தில் படிப்பவர்கள் இல்லை போலும்! அவர் பெரிய பள்ளிக்கூடத்தில் படிக்கிறவர்களைச் சுட்டிச்சொல்லியிருக்கலாம். எப்படியிருந்தாலும் இருக்கட்டும்; இதைவாசிக்கும் நீங்கள் அந்த விஷயத்தையும் வாசித்துப் பார்க்கவேண்டுமென்று சொல்லவே வந்தேன். உங்கள் மாயாண்டி.

## நமது தாதா சொல்லும் கதைகள்.

பிள்ளைகளே! பெண்மணிகளே!

இன்றைக்கு என்தங்கை முதல்முதல் பள்ளிக்கூடம்போன சங்கதிகளைச்சொல்ல இருந்தேன். இது கார்த்திகை மாசமாய் இருப்பதனால் கனமழை பெய்தால் வெளியில் உங்களை இட்டுக்கொண்டு உலாவப் போகலாம். நல்ல வேடிக்கைகளைக் காட்டலாம் என்றும் நினைத்திருந்தேன். மழை பெய்யாமல் வெளுத்துப் போய்விட்டது. பயிர் பச்சைகளெல்லாம் வதங்கி இருக்கின்றன. காற்றும்விஷக்காற்றாக இருக்கிறது. ஆகையால் இங்கே வாருங்கள். இந்தத் திண்ணையின் மேல் வரிசையாக உட்காருங்கள். இப்போது சாயரக்ஷை ஆனபடியால் உங்களுக்குக் குளிர் எடுக்குமோ? ஆனாலும் என்ன? இந்தப் படுதாவைத் தொங்க விடுகிறேன். குளிருக்கு அடைப்பாக இருக்கும். எனக்குக் கொஞ்சம் சலதோஷமா யிருப்பதால் அதற்காகக்கொஞ்சம் அவல் சம்பாதித்து வைத்திருக்கிறேன். உங்களுக்குக் கொஞ்சம் கொஞ்சம் தருகிறேன். அதைச் சாப்பிட்டுக்கொண்டே கதை சொல்லுகிறேன் கேளுங்கள்.

ஒரு ஊரிலே ஒருகுடியானவன் இருந்தான். அந்தவூரிலே ஒருவருஷம் மழையில்லாமல் மானங்காய்ந்து போகவே தரையுங்காய்ந்துபோய்ப்பயிர்பச்சை ஒன்றும் விளையாமல் க்ஷாமகாலமாய் அன்னப்பிடி வெல்லப்பிடியாய் விட்டது. அப்போது அந்தக் குடியானவன், தன் வீட்டில், மூன்று வருஷத்திய பழங் கேழ்வரகின் கூழேயன்றி, வேறொன்றுங் கிடைச்சாமல் சஞ்சலப்படும்போது, ஒருநாள், "இந்த இழவு கூழை எத்தனை நாளைக்கு இப்படி உப்பிற்குக் கூட வழியில்லாமல் குடித்துத் தொலைக்கிறது" என்று எண்ணி, "மாமியார் வீட்டிற்காகிலும் போனால், நாலுநாளைக்கு நல்லபடியே பருப்பும் நெய்யும், பாலுந் தயிரும், காயுங்கறியும், பண்டும்பலகாரமுமாக, விதம்விதமாய் வேளைக்கொரு மாதிரியாகச் சாப்பிட்டு வரலாமே" என்று நினைத்துப் புறப்பட்டுப்போனான். மாமியார் வீட்டில் அப்போது தான் புதுக்கேழ்வரகு விளைந்து அறுவடையாகி உலர்ந்து கொண்டிருந்தது. மருமகனைக் கண்டவுடனே, மாமியார் அந்தப் புதுக்கேழ்வரகைக் குத்தி நோம்பித் தூற்றி, எந்திரத்தி விட்டரைத்து, நல்ல பச்சரிசி நொய்யைக்கூடே கலந்து, வெகு நேர்த்தியாகக் கூழாக்கிக் காலையில் மோர் விட்டுக் கொடுத்தாள். பகலில் களிமொத்தை சமைத்துக் கொடுத்தாள். இரவில் நல்ல வெல்லம் கலந்து அதிமாதுரியமான அடையாகத் தட்டிக்கொடுத்தாள். அதைக்கண்டு, அந்த மருமகன், அந்த அடையைக் கூடத்தின் நடுவிலே வைத்து, அதை மும்முறை சுற்றிவந்து "ஓ! கேழ்வரகே! கேழ்வரகே! உன்னுடைய பெருமையே பெருமை. இன்று காலையில் நீராகாரமாக இருந்தாய்: இன்று பகலில் இலிங்காகார மடைந்தனை: இன்றிரவிலே சக்கராகாரமாயினாய். ஆ! ஆ! உன்னுடைய சக்தியே சக்தி!!" என்று புகழ்ந்தனனாம்.

* மர்மங்கள் = இரகசியங்கள்

கேட்டீர்களோ! இரண்டு மூன்று வருஷமாய் மழையில்லாமல் மானம் காய்ந்துபோன படியால் உங்களுடைய அண்ணன் மார்கள் இப்பொழுது தங்கள் மாமியார் வீட்டுக்குப் போனால் நீராகாரமான கேழ்வரகு கிடைப்பது கூடக் கஷ்டந்தான். அது கிடக்கட்டும். இப்பொழுது 5-மணி தானே ஆகிறது: இன்னும் பொழுது இருக்கிறதே. ஒருவன் தன்னுடைய பிள்ளைகளின் குணதிசயத்தைக் கண்டறிந்த விநோதமான கதையொன்று சொல்லுகிறேன். பேசாமல் இருங்கள்.

ஒரு செல்வவான் தனக்குத்தள்ளாமை மேலிட்டபடியினாலே சாகுங்காலம் சமீபிப்பதை யறிந்து தன்னுடைய சொத்துக்களையெல்லாம் தன் பிள்ளைகள் மூவருக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு ஒரு வைர மோதிரத்தை மாத்திரம் கையில் வைத்துக்கொண்டு அம் மூவரையும் அழைத்து "என்னுடைய அருமை மைந்தர்களே! இன்று முதல் மூன்று மாதத்திற்குள்ளாக உங்கள்மூவரில் எவனொருவன் பெருந்தன்மையான ஒருகாரியஞ் செய்கிறானோ அவனுக்கு இந்த மோதிரத்தைக் கொடுக்கப் போகிறேன்" என்று சொன்னான். மூன்றுமாதங் கழித்து மூத்த குமாரன் ஒருநாள் தகப்பனிடம் வந்து "அண்ணா! கொஞ்ச நாளைக்கு முன்னே முகமறியாத ஒருவன் என் கையில் பற்றுச்சீட்டு ஒன்றும் பெற்றுக் கொள்ளாமலே ஒரு பணமுடிப்பைக் கொடுத்து வைத்தான். அவன் மறுபடியும் வந்து கேட்டபோது, அவன் கொடுத்து வைத்ததைக் கொடுத்தது கொடுத்தபடியே அவன் கையில் ஒப்பித்தேன். அதற்காக அவன் ஆநந்தங் கொண்டு எனக்கு ஒரு வெகுமானஞ்செய்ய வந்தான். நான் அந்த வெகுமானத்தையும் வேண்டாமென்று மறுத்துவிட்டேன்." என்று சொன்னான், தகப்பன் "நீ செய்தது நியாயமான காரியம்" என்றான்.

இரண்டாவது பிள்ளை "தகப்பனாரே! நான் ஒரு ஏரிக்கரையின்மேலே போய்க்கொண்டிருக்கும்போது ஒரு குழந்தை அந்த ஏரியிலே தவறி வீழ்ந்து விட்டது. அப்போது நான் பிராணனுக்குத் துணிந்து, ஏரியில் ஒரேகுதியாகக் குதித்து அந்த குழந்தையை எடுத்து வந்து கரையின்மேலே தேம்பித்தேம்பி அழுதுகொண்டிருந்த தாயினிடத்திலே கொடுத்தேன். இது ஒரு பெருந்தன்மையான செய்கை யல்லவா?" என்று கேட்டான். அதற்குத் தகப்பன் "இல்லை யில்லை. அந்தத் தறுவாயில் எப்படிப்பட்ட சண்டாளனாயிருந்த போதிலும் அந்தக்காரியஞ் செய்வான். இது மனிதருக்கு சுபாவமான குணந்தானே" என்றான்.

பிறகு கடைக்குட்டியாகிய மூன்றாவது புதல்வன் "அப்பா! ஒருநாள் இரவில் நான் ஒருமலையிலிருந்து இறங்கி வரும்போது எனக்கு சன்மப் பகையாளியாகிய ஒருவன் அந்த மலையில் செங்குத்தான ஒரு பாறையின்மேல் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தான். அவன் சற்று இப்படி யப்படி தூக்கத்தில் அசைந்தாலும் பக்கத்திலே பாதாளம்போலிருந்த பள்ளத்திலே விழுந்திருப்பான். அவனை நான் அதிஜாக்கிரதையுடனே எழுப்பி அபாயமில்லாத வேறொரு இடத்தில் கொண்டுபோய் விட்டேன்" என்று சொன்னான். தகப்பனும் அந்த இளைய குமாரனைக் கட்டித் தழுவிக்கொண்டு "என்னருமைச் செல்வனே! மோதிரம் உனக்கே உரியது" என்றுசொல்லி மோதிரத்தை அவன் கையிலே கொடுத்தான்.

ஆயிற்று. இதிருக்கட்டும். நீங்கள் சில சமயங்களில் உங்கள் தம்பிமார்கள் ஒரு சுவரின் மேல்,சாரமணையின் மேல், மரத்தின் மேல் ஏறி இருக்கும்போது "தகப்பனாரிடத்தில் சொல்லுகிறேன்" என்றுபயங்காட்டுகிறீர்கள். இனிமேல் அப்படிச்செய்யவேண்டாம். இறங்கிவிட்ட பிற்பாடு வீட்டில்சொல்லி 'அடிமூட்டி'வையுங்கள். முன்னடி சொன்னால் மோசம்.

சித்திரத்தொழிலில்பேர்போனவராகிய சர்.ஜேம்ஸ்தார்ன்ஹில் என்பவர் சீமையிலே 'ஸேன்ட் பால்' என்னும் ஆலயத்திலே கோபுரத்தின் உட்புறத்திலே சித்திரந்தீட்டிக்கொண்டிருந்தார்.ஒருநாள் அப்படித் தீட்டிக்கொண்டிருக்கும்போது தாம் எழுதிய சித்திரத்தின் உருவம் எட்ட இருந்து பார்த்தால் என்னமாய்க் காணப்படுகின்றது, பார்க்கலாம் என்று ஒவ்வொரு அடியாகப் பின்புறத்திலே ஒற்றிப்போனார். எழுதியிருந்த சித்திரத்தின் மேலே நினைவாயிருந்தபடியினாலே தமக்குப் பின்புறத்திலே பள்ளமென்றும் இன்னும் ஒரு அடி அந்தப் புறத்திலே எடுத்து வைத்தால் கீழே விழுந்து சின்னபின்னமாய்ப் போவோமென்றும் அவருக்கு நினைவில்லை. அப்பொழுது படத்தின் அருகிலிருந்த அவருடைய கையாளானவன், ஐயோ! பாவம், இன்னும் ஒருஅடி எடுத்து வைத்தால் விழுந்து விடுவாரே என்று அஞ்சி உடனே அருகிலிருந்த வர்ணத்தை வாரி படத்தின் மேலே ஒரு புறத்தில் ஊற்றப்போனான்; அது கண்ட உடனே அந்த சித்திரகாரர் "அடடே! என்ன காரியஞ் செய்கிறாய்" என்று கோபித்துக் கொண்டே அவன் அருகில் ஓடினார். அப்போது அந்தக் கையாளானவன் "ஐயா! என்னை மன்னிக்கவேண்டும். கேளுங்கள், தாங்கள் இன்னும் ஒரு அடி பின்னே எடுத்துவைத்தால் விழுந்து விடும்படியான அபாயகரமான நிலையிலிருக்கும்போது, பத்திரம்! பத்திரம்! என்

று எச்சரிக்கைசெய்ய எத்தனித்தால் "தாங்கள் அல றுண்டு எப்படியும் விழுந்திருப்பீர்கள். ஆனதினாலே இந்த உபாயஞ் செய்தேன்" என்று சொன்னான். அதுகேட்டு அவர் அதிக சந்தோஷமடைந்தார். நம் முடைய எசமானர் உயிர்தப்பினாரே என்று அந்த ஆளுக்கும் அதிக திருப்தி உண்டாயிற்று.

பார்த்தீர்களா! அந்தசமயத்தில் அந்தஆள் என்ன உபாயம் செய்தான். நல்லது, விளக்கு வைக்கிற சமயம் ஆய்விட்டது! உங்கள் வீட் டில் தேடுவார்கள். போய்வாருங்கள.

கிழவன்.

## குட்டியண்ணாகடிதம்.

என் அன்புள்ள சிறுதோழர்களே! தோழிகளே!

சென்றதடவை உங்கள் சமுகத்தில் வந்து உங்க ளோடு கூடிக்கலந்து சந்தோஷிக்க நான் தவறிப் போனதற்குக் காரணம் இன்னதென்று உங்களுக்குத் தெரிந்திருக்குமே. நமதன்பர் மாயாண்டியும் சொல் லியிருப்பாரென்று நம்புகிறேன். இவ்வருஷத்தில் எனக்கிருந்த பரீக்ஷை வேலைகள் முந்தியநாளோடு முடிந்தன. இனிமேல் எனக்கு ஸாவகாசந்தான். எனக்கு முன்னேயே உங்களோடு கூடிக்களிக்க நம் முடைய தாதா, மாயாண்டி முதலிய பெரிய நண்பர் கள் வந்திருப்பார்க ளாகையாலே நான் அதிகநாழி உங்களோடு உரையாடி விளையாடிக்கொண்டிருக்கத் தகாது. உங்களோடு ஸம்பாஷியா விட்டாலும் மன து கேட்கவில்லை. கள்ளமில்லாத உள்ளமுடைய பிள்ளைகளாகிய உங்களோடு, கண்டதைக் கேட்ட தை உண்டதை உடுத்ததைச் சொல்லாதநாள் எனக் குப் பொல்லாத நாளே. உங்களுடைய அன்பும், அமைதியும், அடக்கமும் தோன்றும் அழகிய முகத் தைக் காணாதநாள் வீணானநாள். உங்களோடு உரை யாடி விளையாடிப் பழகிய நாளே அழகியநாளாம்.

இந்தத்தடவை உங்களுக்குச் சொல்லுவதற்கு இவ் வூரில் பலவிடங்களில் நடந்த பரீக்ஷை சங்கதிகளைப் பார்க்கிலும் வேறு விசேஷ சங்கதிகள் என்னிடத் தில் ஒன்றும் இல்லை. அந்தப் பரீக்ஷைக் கூடங்க ளில் அரும்புகட்டாத பத்துவயதுப் பாலன்முதல் அடியும் நுனியும் நரைத்த ஐம்பது வயதுக் கிழவன் வரையில் பரீக்ஷைகொடுக்க வந்திருந்த அதிசயமும் பரீக்ஷைக்குக் கொடுக்கும் பிரச்னைப் பத்திரங்களில் பரீக்ஷகர்களில் சிலர், அந்தப் ப்ரச்னங்களில் சிலம்பங் காட்டிய சிப்பாய்த் தனமும், அப்படிப்பட்ட கேள் விகளைப் பார்த்தவுடனே, திண்ணைதூங்கித் தெருவி லாடி, வம்புபேசி வாயாடி, வாத்தியார்களை இகழ் ந்து காலம்போக்கிய சில அலங்கார வித்தியார்த்தி கள் கெர்ப்பங்கலங்கி, ஆடுதிருடின கள்ளன்போலே அப்புறம் இப்புறம் பார்த்து மருள மருள விழித்து, குண்டிதேயக் குந்தியிருந்து கொட்டாவிவிட்டு, கோ ட்ஸூம், பூட்ஸூம், வாட்சும், ஹாட்ஸூமாகக் கோலஞ்செய்து கோலாகலஞ் செய்துவிட்டுப்போன வேடிக்கையும் வெளி ஜில்லாக்களிலிருந்து பரீக்ஷை க்குப் பணங்கட்டி இச்சென்னையில் பரீக்ஷை கொடு க்கவந்த வித்தியார்த்திகளிருவரில் ஒருவர் பரீக்ஷை கொடுக்கவேண்டிய தினத்தில் காலையில் 9-மணி முதல் சென்னைக் கிறிஸ்டியன்காலீஜ் இன்ன இடத் திலிருக்கிறதென்று அறிய முடியாமல் உச்சியில் சூரி யன்வந்து சரியாய் $12\frac{1}{2}$மணிக்குக்கிறிஸ்டியன்காலீஜ் இன்னதென்று கண்டுபிடித்த திறமையும், மற்றொரு வர் எப்-ஏ. பரீக்ஷை கொடுக்கவேண்டியவர் மெட்ரி குலேஷன் பிள்ளைகள் இருக்கும் கூடத்தில் பரீக்ஷை க்கு வராமலிருந்த ஒருவனுடைய ஸ்தானத்தில் உட்கார்ந்து மெட்ரிகுலேஷன் ப்ரச்னைகளுக்கு வி டையெழுதிக்கொடுத்து வெகு சந்தோஷத்தோடு வெளியில்வந்து, பின்பு தான் செய்த தவறு தெரிந்து விசனப்பட்ட விந்தையும், அப்பப்பா! நான் என்ன சொல்வேன்! வெகுவினோதமா யிருந்தன. இன்னும் சில விசேஷ சமாசாரங்கள் இந்தப் பரீக்ஷைகளைப்பற் றியே பேசுவேன்; எனக்கு ஊருக்குப் போகவேண் டிய அவசரம் அடித்துத் தள்ளுகிறது. இந்தவேளை யில், எனக்குமுன்னேயே தங்கள் தங்கள் ஊருக்குப் போயிருக்கும்நண்பர்கள் எழுதும்கடிதங்களும் வந்து குவிகின்றன. நான் ஊருக்குப் போக இருக்கிறே னென்று தெரிந்து என்னிடம் வார்த்தைசொல்லி விடைகொடுக்க வரும் இலடர்களும் பலர். ஆதலால் அன்புள்ள சிறு நண்பர்களே! நான் இம்முறை இவ் வளவில் நிறுத்தி, கும்பகோணத்திற்குச் சமீபத்தி லிருக்கும் என்னுடைய சகோதரரிடம்போய் அங்கு சிலநாள் இருந்துவிட்டு விடுமுறை கழிந்தவுடனே மறுபடியும் உங்களிடம் வந்துவிடுவேன். நான் போ கும் இடத்தில் நேரும் விசேஷங்களையும் ஸமயம் வாய்த்தால் உங்களுக்குச் சொல்லாம லிருக்கமாட் டேன். அதுவரையில் நம்மெல்லாரையும் பரம கருணாநிதியாகிய பகவான் பாதுகாத்தருள்வாராக. போய்வருகிறேன்.

உங்கள் அன்புள்ள

குட்டியண்ணா.

---

## விசேஷக் குறிப்புகள்.

**சென்னை நகர் ஸிவில்கோர்ட்டு.** இந்த மாசம் பிறந்ததோடு நேர்ந்த முக்கியமான சம்பவம் ஒன்று என்னவெனில் இச்சென்னைமாநகரில் புதிதாய் ஒரு ஸிவில் கோர்ட்டு ஏற்படுத்தப்பட்டதேயாம். சென் னையில் ஸ்மால்காஸ் கோர்ட்டை விட்டால் மற்ற லாவாதேவி வழக்குகளுக்கெல்லாம் ஹைகோர்ட்டு அசல் தரப்பைத்தவிர வேறுகோர்ட்டில்லை. இதனால் அற்ப சொற்பமான தொகைகள் சம்மந்தப்பட்ட

ஒழுங்கான ஸிவில் வழக்குகள் கிளம்புமானால், வழக்காளி தன்கேஸை ஹைகோர்ட்டிலே தாக்கல் செய்யவேண்டியதாயிருந்தது. 500, 300 என்று சொற்பத் தொகைகளுக்கு ஹைகோர்ட்டு அசல் தரப்பில் வழக்குக் கொண்டு வருவதென்றால் கோர்ட்டுச் செலவு, வழக்கிலிருக்கும் தொகையைவிட அதிகமாகிறது. இது ஏழை வழக்காளிகளுக்குக் கஷ்டம் விளைப்பதாயிருக்கிறதென்றும் ஹைகோர்ட்டில் வேலையதிகரித்து வருவதால் சொற்பத்தொகைசம்மந்தப்பட்டவழக்குகளை யெல்லாம் ஹைகோர்ட்டு ஜட்ஜிகள் விசாரிக்க நிமித்தமின்றி, வெளிஜில்லாக்களி லிருக்கும் ஸிவில் கோர்ட்டுகளைப்போல் சென்னைக்கும் ஒரு ஸிவில் கோர்ட்டு நியமித்தால் ஹைகோர்ட்டில் இப்போதிருக்கும் வேலைகளின்பாரம் குறையுமென்றும், இப்புது ஸிவில் கோர்ட்டு ஏற்படுத்தப்பட்டது. இக்கோர்ட்டுக்கு ஸ்மால்காஸ் கோர்ட்டில் 2-வது ஜட்ஜாக விருந்த திவான்பஹதூர் பி. ஸ்ரீனிவாசராவ் அவர்கள் முதல் ஜட்ஜாக நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்தமாசம் I-வயில் இப்புது ஸிவில் கோர்ட்டு திறக்கப்பட்டு அன்று முதல் அதில்வேலை நடந்து வருகிறது.

---

**ராஜா ஸர் இராமசாமி முதலியார் சத்திரம்.** இந்த மாசத்தில் நடந்த விசேஷ சம்பவங்களில் சென்னை பூந்தமல்லி ரோட்டில் ராஜா ஸர் சவலை இராமசாமி முதலியர் அவர்கள் கட்டிய புது சத்திரம் கனம் பொருந்திய கவர்னர் லார்ட் வென்லாக் அவர்களால் திறக்கப்பட்டது ஒன்று. அத்தருணம் இந்நகரிலுள்ள பல ஜனசமூகத்தவர்களும்வந்திருந்து எல்லாருக்கும் பொதுவாய் அவர் கட்டிவைத்த சத்திரத்துக்காகவும் அவருடைய மற்றதர்மங்களுக்காகவும் அவரைப்புகழ்ந்து பேசி அவருக்குப் பல சமூகத்தார்களுடைய நன்றியறிதலையும் தெரிவித்தார்கள். கடைசியில் வென்லாக்பிரபு ஒரு அரசமரமும், அவர் பத்தினி வென்லாக்பெருமாட்டி ஒரு வேப்பமரமும் அவர்கள் கையால் வைத்துத் தண்ணீரூற்றிய பின் சத்திரத்தைத் திறக்கும் சடங்கு முடிவுக்கு வந்தது.

---

**காங்ரேஸ் சபை.** இந்த வருஷத்து காங்ரெஸ் சபை நாளது மீ 28உ புதன்கிழமை மத்தியானத்துக்கு மேல் அலஹபாத்தில் கூடப்படும். அம்மகாசபையில் அக்கிராசனாதிபதி ஸ்தானத்தைவகிக்க பார்லிமெந்து மெம்பராயிருக்கும் மிஸ்ட்டர் தாதாபாய்நௌரோஜி வர சரிப்படாமையாலும், இன்னும் தக்க சிலர்க்கு சௌகரியப்படாமையாலும், முதல் காங்ரெஸ் சபையின் அக்கிராசனாதிபதியாகிய பாரிஸ்டர் மிஸ்ட்டர் உமேஷ் சந்தர பொனர்ஜி யவர்கள் இந்த வருஷம் கூடும் காங்ரெஸ் சபையில் அக்கிராசனாதிபதி ஸ்தானத்தை வகிக்கத் தெரிந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

---

**மிஸ்டர் தாதாபாய் நௌரோஜி M. P.** பின்ஸ்பரி மாகாணத்தின் மத்தியபாகத்துக்கு பார்லிமெந்து மெம்பராகவிருக்கும் மிஸ்டர் தாதாபாய் நௌரோஜி யவர்கள் எலெக்ஷனைப்பற்றி அவருடைய எதிரி கொடுத்த விண்ணப்பம் நாளது மீ 13, 14-உ களில் விசாரிக்கப்பட்டதில் மிஸ்டர் தாதாபாய் அவர்களுக்கும் அவருடைய எதிரி காப்டன் பென்டன் அவர்களுக்கும் கொடுக்கப்பட்ட வோட்டுச் சீட்டுகளையெல்லாம் ஜட்ஜிமுன்னிலையில் பரிசோதித்துப் பார்த்தார்கள். பரிசோதனை முடியு முன் காப்டன் பென்டன் அவருடைய விண்ணப்பத்தை வாப்ஸ் வாங்கிக்கொண்டதால் மிஸ்டர் தாதாபாய் அவர்களுடைய நியமனம் உறுதி செய்துவிடப்பட்டது. 14உ சாயந்திரம்வரையில் நடந்த பரிசோதனையில் இருவர்பக்கத்து வோட்டுச்சீட்டுகளும் சரி தொகையாகவிருந்தன. மேல் பரிசோதனையில் காப்டன் பென்டனுக்கு ஒருசீட்டுக் குறைந்தாலும் மிஸ்டர் தாதாபாயுடைய மெம்பர் ஸ்தானம் உறுதிசெய்யப்படுவதோடு அவருடைய செலவு தொகைகளையெல்லாம்கூட இவர் கொடுக்கவேண்டியதாக விருக்கும். ஆகையால் வோட்டுகள் சரிசமமாக வந்ததும் காப்டன் பென்டன் அவரவர்களுடைய செலவை அவரவர்கள் பொறுத்துக்கொள்கிறதென்று உடன்படிக்கை செய்துகொண்டு விண்ணப்பத்தை வாப்ஸ் வாங்கிக்கொண்டுவிட்டார். இந்தவிசாரணை சீக்கிரத்தில் முடிவாகாமலிருந்ததனாலே மிஸ்டர் தாதாபாய் நௌரோஜி இந்தியாவுக்குவர சரிப்படாமற் போய்விட்டது. இப்பொழுது பார்லிமெந்துசபையில் அவருக்குள்ள ஸ்தானம் உறுதிப்பட்டுப் போனதால் இனி அடுத்த ஜெனரல் எலெக்ஷன்வரையில் அவருடையஸ்தானத்துக்கு அபாயமில்லை.

---

**ஜூரிவிசாரணை ஏற்பாடுவிஷயம்.** வங்காளத்து உதவிக்கவர்னர் ஸர் சார்லஸ் எலியட் அவர்கள் அவ்விராஜதானி வெளிஜில்லாக்களில் அனுஷ்டானத்திலிருந்த ஜூரிவிசாரணை ஏற்பாட்டை எடுத்துவிட உத்திரவு செய்து, உத்திரவு செய்த 5-நாளைக்குள் அப்படியே எடுத்து விட்டபடியால் அதைப்பற்றி அவ்விராஜதானியிலெங்கும் கல்லல் அதிகமாக விருக்கிறது. இதைப்பற்றி இராஜப்பிரதிநிதி யவர்களுக்குத் தெரிவித்தும் அவர் சாதகம் செய்யவில்லை யாதலால் கல்கத்தாநகரிலுள்ள சுதேச,அங்கிலேய ஜன சிரேஷ்டர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து ஷெரிப் மூலமாக முறைப்படி ஒரு பெரிய மகாநாடு கூட்டி கவர்ன்மெண்டார் செய்தது பிசகென்று ஆக்ஷேபித்து இந்தியா மந்திரியவர்களுக்கு இதைப்பற்றி மனுப்பண்ணிக் கொள்ளத்தீர்மானித்தார்கள். இதற்காகக்கூடியமகாநாடு நாளது மீ 20உ சாயந்திரம் கல்கத்தா 'ட்வுன் ஹாலில்' கூடியது.

---

**சென்னைக்கு டிராம்வே.** சென்னையில் 'டிராம்வே' என்னும் வீதிச்சிற்றிருப்புப் பாதைகள் போட புதிதாய் ஒரு கம்பெனி யேற்பட்டு அதற்கு மூலதனம் சேர்த்து வருகிறார்கள். அக்கம்பெனியின் சேர்மானாகிய மிஸ்ட்டர் உவில்லியம் டிக்பி ஸி.ஐ.இ. அடுத்தமாசத்தில்வேலை யாரம்பிக்க வேண்டுமென்று அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து வருகிறார்.